# செந்தமிழ்ச் செல்வி




## பொன் விழா ஆண்டு

### தமிழ்மொழி, இனம், நாடு

இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

தொடக்கம்

சிலம்பு-ரு0] வள்ளுவர் ஆண்டு உ00௬, ஆவணி (Sep'75) [பரல்-க

# ‘செந்தமிழ்ச் செல்வி’

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

௧. டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பி.எச்டி.
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்

௨. ‘சித்தாந்த கலாநிதி’, உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், மதுரை.

௩. திரு. கொண்டல், சு. மகாதேவன் அவர்கள், எம். ஏ., பி. எஸ்ஸி.
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித்துறை.

௪. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப். லிட்.
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

௫. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு), (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

௬. புலவர் இரா. இளங்குமரன்,
திருநகர், மதுரை-6.

௭. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.


---

# உள்ளுறை

Vol. L (ருo) 1975—76

66-3




Acc. No. 38096.

The South India Saiva Siddhanta Works

All Rights Reserved] Publishing Society, Tinnevelly, Ltd.,

Madras-1 Tirunelveli-6. Madurai-1. Coimbatore-1,

Kumbakonam-1. Tiruchirappalli-2.

## 'செந்தமிழ்ச் செல்வி'

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்
### (EDITORIAL BOARD MEMBERS)

க. திரு. டாக்டர். ந. சஞ்சீவி எம்.ஏ., பி.எச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர், சென்னைப் பல்கலைக் கழகம்.

உ. " 'சித்தாந்த கலாநிதி' வித்துவான்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், மதுரை.

௩. " கோண்டல். சு. மகாதேவன் அவர்கள்,
எம். ஏ., பி.எஸ்ஸி.
இயக்குநர், தமிழகவரசு, தமிழ் வளர்ச்சித்துறை.

ச. " டாக்டர், சோ. சிங்காரவேலன், எம்.ஏ., பி.எச்டி.,
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

ரு. " செந்தமிழ்க்கலைமணி, வித்துவான்
பண்டித, கா. போ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு), எம்.ஏ., பி.ஓ.எல்., (சென்னை)
அரசினர் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி, கொழும்பு.

சு. " புலவர் இரா. இளங்குமரன் அவர்கள்,
திருநகர், மதுரை-6.

எ. " இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம்.

---

ஆசிரியர் :
வ. சுப்பையா, கழக ஆட்சியாளர்.

# உ ள் ளு றை

———

# படங்கள்

---

17.9/75


# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ００சு, ஆவணி | பரல் |
| --- | --- | --- |
| ௫௦ | செப்டம்பர் 1975 | க |


## 'செந்தமிழ்ச் செல்வி'யின் பொன்விழா ஆண்டு

செல்வத் தமிழின் சீர்பாடும் 'செந்தமிழ்ச் செல்வி'யின் ஐம்பதாவது ஆண்டு இவ்விதழுடன் தொடங்குகிறது. இயற்கை மொழியாகிய தமிழும், தமிழ் நெறியாகிய சிவசமயமும் தமிழ் மக்கட்கு இரு கண்களெனக் கொண்டு அவ் விரண்டின் தனிச் சிறப்புக்களைப் பற்றிச் சங்ககால முதல் பிற்கால இலக்கண இலக்கியங்களையும், மெய்கண்ட சிவசமய நூல்களையும் ஐயந்திரி பறக் கற்றுணர்ந்து பேசியும் எழுதியும் வந்த மறைத்திரு மறைமலையடிகளார்வழி நின்று தொண்டாற்றும் பொருட்டே ''சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்'' என்னும் கூட்டுப்பங்கு திறுவனம் என் அருமைத் தமையனுரும் அடிகளார் மருகரு மாகிய திருவரங்கனுரால் 1920 செப்டம்பர்த் திங்களில் நிறுவப் பெற்றது.

தனித்தமிழ்த் தந்தை மறைத்திரு மறைமலையடிகளார் நூற்றுண்டுப் பிறந்தநாள் புகுமுக ஆண்டும், செந்தமிழ்ச் செல்வியின் பொன்விழா ஆண்டும் ஒரே காலத்தில் தொடங்கு வது அம்மை அம்பலவாணர் அருட்குறிப்பேயாகும். எனவே இப் பொன்விழா ஆண்டினைக் குறிக்கும் ஐம்பதாவது சிலம்பு ஒவ்வொரு பரலிலும் அடிகளார் வரலாறு இடம் பெறுதல் வேண்டுமென்ற என் விருப்பத்திற்கிசைந்து அடிகளாரின் புகழ் பரப்பும் மாண்புமிக்க மாணவர் திருக்குறள் பீடம் அழகரடிகள் ''மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி'' என்னுந் தலைப்பில் எழுதியனுப்பிய முதல் கட்டுரையே இதன்கண் வெளியிடப்பெறுகின்றது. இதனுல் ஐம்பதாவது சிலம்பு முழுதும் தனித்தமிழ்த் தந்தை அடிகளாரின் புகழ்மணங் கமழும் என்றல் அது மிகையாகாது.

கழகம் ஒரு நூற்பதிப்புக் கழகமாக மட்டுமிருக்குமாயின் ஏதேதோ நூல்களைப் பதிப்பித்துப் பெரும் பொருளீட்டிப் பங்காளிகட்கு வழங்கிக்கொண்டிருக்கும். கழகம் அடிகளார் தனித்தமிழ்க் கொள்கையினையும், சிவநெறியினையும், சீர்திருத்தக் கருத்துக்களையும் பரப்பும் பொருட்டு நிறுவப் பட்டதால் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தையும், தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தையும் நிறுவி ஆண்டுதோறும் நூற்பதிப்பு விற்பனையினால் கிடைக்கப்பெறும் ஊதியத்தில் நேர் பாதியினை அவ்விரண்டு சங்கங்களுக்கும் பிரித்தளித்து வருகின்றது. அவ் விரண்டு சங்கங்களும் சங்கப்பதிவுச் சட்டத்தின்படி பதிவு செய்யப்பெற்றுள்ளன.

கழகம் கொள்கையோடு நூல்களை வெளியிடுவதால் மட்டும் சைவசமயத்துக்கோ செந்தமிழ் மொழிக்கோ தொண்டு செய்ய முடியாது என்பது பிற பதிப்பகங்களைக் கொண்டு அறியலாம். அதனாலே தான் கொண்ட கொள்கைகளைப் பரப்புவதற்காகச் 'செந்தமிழ்ச் செல்வி' என்னுந் திங்கள் இதழை 1923 சனவரித் திங்களில் அடிகளாரின் தலைமாணாக்கரும் பச்சையப்பன் கல்லூரித் தமிழ் விரிவுரையாளருமான மணி திருநாவுக்கரசு முதலியாரவர்களை ஆசிரியராகக் கொண்டு தொடங்கப் பெற்றது.

இரண்டாவது உலகப் போரினால் தாள் கட்டுப்பாட்டுச் சட்டம் 1943இல் வந்தது. இதழ்களை வெள்ளை அச்சுத் தாளில் (White Printing Paper) அச்சிடக் கூடாத நிலை ஏற்பட்டவுடன் செய்தி அச்சுத்தாளில் (News print) அச்சிட விரும்பாமல் செல்வி 1944 மே முதல் 1948 ஆகஃச்டு முடிய நிறுத்திவைக்கப்பட்டது. மற்றப்படி செல்வி திங்கடோறும் முறையாக வெளியிடப்பெற்று வருகிறது.

செந்தமிழ்ச் செல்வியின் இதழாசிரியர் குழுவில் உறுப்பினர்களாகப் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை, சிவத்திரு மா. வே. நெல்லையப்ப பிள்ளை, நாவலர் பண்டித வேங்கடசாமி நாட்டார், பண்டிதமணி கதிரேசச் செட்டியார், பண்டித ஆ. கார்மேகக் கோனார், காழி. சிவ. கண்ணுசாமிபிள்ளை, டாக்டர் மா. இராசமாணிக்கனார், சித்தாந்த பண்டிதர் ப. இராமநாத பிள்ளை முதலியோர் இருந்து வந்திருக்கின்றனர்.

தொண்டுள்ளத்தோடு கழகம் தொடங்கப் பெற்றதனாற்றான் சென்னையில் செந்தமிழ்ச் செல்வி தொடங்கிய பின்னரே தமிழை மட்டும் எடுத்துப் பல்கலைக் கழகத்திலே புலவர்ப் பட்டமோ, எம். ஏ. பட்டமோ பெறும் வாய்ப்பு ஏற்பட்டது.

அரசு அலுவலகங்களெல்லாம் தமிழிலே எழுதுதல் வேண்டும் எனவும், பள்ளி, கல்லூரிகளில் கலைப் பாடங்களையெல்லாம் தமிழிலே சொல்லித்தர வேண்டும் எனவும் அரசு தீர்மானித்தது. அப்போது ஆட்சிச் சொற்பட்டி, கலைச் சொற்பட்டி இரண்டையும் உருவாக்குவதற்குச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கச் செயலர் புலவர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் பெரு முயற்சி செய்து சொற்பட்டிகளை உருவாக்கினர். ஆனால் அவர்கள் செயல்கட்கெல்லாம் கழகம் உயிரூட்டமாக நின்று உதவியது. தூய தமிழ்ச் சொற்கள் அப்பட்டிகளில் இடம் பெற வொட்டாமல் ஒரு வகுப்பைச் சேர்ந்தவர்கள் தடைசெய்து வந்தனர்.

ஆகாஷ்வாணி 'வானொலி' ஆயிற்று. திரிபுற்ற ஊர்ப் பெயர்கள் தூய தமிழ் வடிவம் பெற்றன. அடிகளாரின், பழைய பெயர் 'சுவாமி வேதாசலம்' 'மறைமலையடிகள்' ஆனது போல, புலவர்களில் சிலரும் அரசியல் தலைவர்களில் சிலரும் தங்கள் பெயர்களை மாற்றித் தூய தமிழ்ப் பெயர்களை அமைத்துக் கொண்டார்கள். இல்லச் சடங்குகள் தமிழிலே நடைபெறத் தொடங்கிவிட்டன. திருக்கோயில்களில் தமிழிலே மலர் தூவி வழிபடலும் நடைபெறத் தொடங்கியுள்ளது.

அடிகளார் 15—9—1950இல் அம்மை அம்பலவாணர் திருவடி சேர்ந்தபோதிலும் அவர்களுடைய கொள்கைகள் படிப் படியே தமிழ்நாட்டில் பரவி வருகின்றன. அவை பரவுவதற்குச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் அதன் பல்வேறு அமைப்புக்களும் தொடர்ந்து பணிசெய்து வருகின்றன.

செந்தமிழ்ச் செல்வி பொன்விழா ஆண்டு ஐம்பதாவது சிலம்பினைத் தமிழ்ப் புலவர்களும், தமிழன்பர்களும் தாந்தாம் வரவழைப்பதோடு தம் நண்பர்களையும் வரவழைக்குமாறு வேண்டிச் செல்வி முறையாக நடைபெற ஆக்கமும் ஊக்கமும் நல்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

———

## வேண்டுகோள்

இதன் ஆண்டுக் கையொப்பம் ரூ 10. எட்டுக் கையொப்பங்கள் சேர்த்து அனுப்பின் ஒருபடி கைம்மாறாக அனுப்பப்பெறும். திங்கள் ஒன்றுக்கு ஒரு ரூபா விழுக்காடு எட்டு ரூபா பெற்றுப் பணவிடைக் கழிவைக் கழித்துப் பத்துத் திங்கள் வரை அனுப்பி வைக்கலாம்.

—வ. சு.



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

*மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்*
**அழகரடிகள் (இளவழகனார்)**

தொண்ட நாடு :

தொண்டர் திகழ்வது தொண்ட நாடு; அருளாளர் இராமலிங்க அடிகளார், 'தொண்ட நாடு என்னும் பெயரே பொருத்தமுடையது; தொண்டை நாடு என்பது பொருந்தாது' என்று விளக்கினர். தவமூதாட்டியாரான ஔவையார், 'சான்றோரை உடையது தொண்ட நாடு' என்று தெரிவித்தார். சான்றோர் தொண்டுகளை விளக்கித் 'திருத்தொண்டர் புராணம்' என்று ஒரு பெருங்காப்பியமே இயற்றியருளிய சேக்கிழார் பெருமானும், வாழ்க்கைத் தொண்டுகளைத் தெளிவித்து மாபெரும் உலகப் பொதுமறை வழங்கிய திருவள்ளுவரும் தொண்ட நாட்டினரே! தமிழ்நாடு அரசின் ஆட்சிப் பீடமும், கடற்கரை யழகு மிக்கதுமாகிய சென்னைமாநகரம் தொண்ட நாட்டிலேதான் மிளிர்கின்றது. 'பாலாறு' முதலிய நீர் நிலைகளையும் அவை பாய்ந்து வளஞ்சுரக்கும் வயல்களையும் உடைய 'தெண்ணீர் வயல் தொண்ட நாடு' இத்தகையது!

திருக்கழுக்குன்றம் :

இத் தொண்ட நாட்டின் சிறப்புத்தலம் திருக்கழுக்குன்றம்! அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்மறைப் பொருளை அன்பர்களுக்கு நினைவூட்டும் 'நால்வேத மலை' இங்கே உள்ளது. உச்சியில் சிவபெருமான் திருக்கோயில் திகழ்கிறது. அன்றுடம் உச்சிப்போதில் இரண்டு கழுகுகள் இன்றும் வந்து வந்து உணவருந்திச் செல்லும் தெய்வப் பெருமை நிகழ்ந்து வருகிறது.

*"சென்று சென்று தொழுமின்"*

என்பது நம்பியாரூரரின் திருக்கழுக்குன்றப் பாடல்!

சிவபெருமானுக்கு மலையுச்சியில் அமைந்த திருக்கோயில் திருக்கழுக்குன்றத்தைத் தவிரத் தமிழகத்தில் வேறெங்குமில்லை; மற்ற இடங்களிலெல்லாம் மலைத் தலங்கள் என்பவை மலைச்

சரிவில் அமைந்தவை. இந்தியப் பெருமலையாகிய பனிபடு நெடுவரையில் 'திருக்கயிலாயம்' ஒன்றும், இத் திருக்கழுக் குன்றமுந்தாம் உச்சித் தலங்கள்!

"கயிலாயத் துச்சி யுள்ளான்"
"கழுக்குன்றத் துச்சியாய கடவுளே"

என்பார் அப்பரடிகள்! 'திருக்கயிலாயம்' 'திருக்கழுக்குன்றம்' என்னும் இவ்விரண்டினுள் 'வேதமலை' என்னும் சிறப்புக் குரியது திருக்கழுக்குன்றமே!

இது, காட்சிக்கினிய இயற்கைத் தலம்! 'உமைப் பிராட்டி யாரைக் காதலிக்கும் சிவபெருமான் மற்றோரிடத்தையும் காதலிக்கின்றான்; அது திருக்கழுக்குன்றம்' என்று திருஞான சம்பந்தர் கருதுகிறார்.

"பெண்மகள் தன்னோடு ஒருபாகம் காதல்செய்தான்,
காதல் செய்கோயில் கழுக்குன்றே"

என்பது அவர் அருளிச்செயல்.

"கண்ணுதலான் காதல்செய் கோயில் கழுக்குன்றை
நண்ணியசீர் ஞானசம் பந்தன் தமிழ்மாலை
பண்ணியல்பாற் பாடிய பத்தும் இவைவல்லார்
புண்ணியராய் விண்ணவ ரோடும் புகுவாரே"

என்பது அவர் திருக்கடைக் காப்பு! இத் திருப்பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் பெருமான் இத் தலத்தைக் காதலிக் கின்றான் என்னுங் குறிப்பு வருகின்றது!

மாணிக்கவாசகர், உலகம் உய்யும்பொருட்டு இறைவன் திருவடிகளை வைத்துக், 'குருபீடம்' அமைத்த திருவடித் தலம்!

"இலங்குகின்றநின் சேவடிகள் இரண்டும் வைப்பிடம் இன்றியே
கலங்கினேன் கலங்காமலேவந்து காட்டினாய்கழுக் குன்றிலே"

என்பது அப் பெருமான் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகம்!

சமய குரவர் நால்வர் பதிகங்களையும் உடையது திருக் கழுக்குன்றம்! தொண்ட நாட்டில் நால்வர் பாடலும் பெற்ற தலம் வேறு இல்லை.

அடிகள் பிறப்பு :

திருக்கழுக்குன்றத்தில் விளங்கும் சிவபெருமான் திருப் பெயர் 'வேதாசலம்' என்பது! ஆசிரியர் மறைமலையடிக

ளாருக்கும் 'வேதாசலம்' என்றே பெயர் அமைந்தது! காரணம், சொக்கநாதபிள்ளை சின்னம்மையார் என்னும் அவர் பெற்றோர், திருக்கழுக்குன்றம் வந்து ஒரு மண்டலம் பாடு கிடந்து அடிகளாரைப் பெற்றெடுத்தனர் என்ப. அவர் ஊர் சோழவளநாட்டின் நாகபட்டினத்தைச் சேர்ந்த காடம்பாடி; கடற்கரை ஓரத்தில் நெய்தற்சோலை அமைந்த சிறிய ஊர்; அவ்வூரில் 15-7-1876-ல் அடிகளார் தோன்றினர்.

ஆண்டவன் அருள்வெளியில் எத்தனையோ வகைகளில் உயிர்கள் உள்ளன; பெறுவான் தவத்துக்கேற்றபடி இறைவன் அவ்வுயிர்களுள் ஒன்றை அவர்கள் வயிற்றில் புகுவிக்கிருன். ''தம் தம் வினையான் வரும்'' என்பது பொதுமறை! வளரும் குழந்தைகளின் எதிர்காலச் செய்திகளுக்குப் பெற்றோர் தவங் களும் காரணமாகின்றன. சமய குரவர் திருஞானசம்பந்தரை, அவர் தந்தையார் தவம் செய்து வேண்டியே பெற்றார் என்று சேக்கிழார் கூறுகின்றார்.

> ''மனையறத்தில் இன்பமுறு மகப்பெறுவான் விரும்புவார்
> அனையநிலை தலைநின்றே ஆடியசே வடிக்கமலம்
> நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீறுக்கும்
> புனைமணிப்பூண் காதலனைப் பெறப்போற்றும் தவம்புரிந்தார்''

என்பது திருத்தொண்டர் புராணம் (திருஞானசம். 19.)

ஆசிரியர் மறைமலையடிகளார் தோற்றம் இங்ஙனம் இறைவன் படைப்பு! அவர் புரட்சிகளுக்கும், அருஞ்செயல் களுக்கும், திருத்தங்களுக்குமெல்லாம் திருக்கழுக்குன்றம் வேதமலைப் பெருமானது அருள்நோக்கமே மூலமாயிற்று. கடவுள் திருவிளையாடல் அடிகளின் வாழ்க்கை நிகழ்ச்சிக ளாயின; தன்னிகரற்ற கடவுள், அடிகளாருக்குத் தன்னிகரற்ற தனித்தமிழ் வல்லமையை வழங்கியருளினன். எல்லா எதிர்ப்பு களும் பின்னடைந்து தமிழகத்துக்கு உய்வு அமைந்தது!

அப்பர் திருத்தாண்டகம் ஒன்று :

> ''அப்பன்நீ அம்மைநீ ஐயனுநீ
> அன்புடைய மாமனும் மாமி யுநீ
> ஒப்புடைய மாதரும் ஒண்பொ ருளுநீ
> ஒருகுலமும் சுற்றமும் ஒரு ரூநீ
> துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்று வாய்நீ
> துணையாய் என்நெஞ்சம் துறப்பிப் பாய்நீ
> இப்பொன்நீ இம்மணிநீ இம்முத் துநீ
> இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே''

இதன் ஒவ்வொரு சொல்லும் அது தெரிவிக்கும் கருத்தும் ஆழ்ந்து சிந்தித்தற்குரியன; வாழ்க்கையில் நேரும் அமைப்புக ளெல்லாம் இத் திருத்தாண்டகத்தில் முறையே எடுத்துக் காட்டப்படுகின்றன.

மறைமலையடிகளுக்கு இவ்வுலகத்தில் அமைந்த தந்தை யாரும் தாயாரும் ஒப்புடைய மனைவியாரும் செல்வமும் இனமும் சுற்றமும் ஊருமெல்லாம் இறைவன் வழங்கிய நன்கொடைக ளாயிருக்கின்றன. அவர் துய்த்த 'தாய் மொழி' 'சிவ சமயம்' 'தமிழ் நாடு' முதலிய உலக நிலைகளும், அவற்றைத் துய்ப் பதற்குச் செலுத்தப்படுங் கருவிகளா யமைந்த 'உடலமைப்பு' 'குரல்' 'மனம்' 'நூல் நிலையம்' முதலிய அனைத்தும் இயற்கையில் அமைந்த இறைவன் உதவிகள் துணையாய் உடனிருந்து உணர்வைத் தனது நெறியூடு செலுத்தி இறைவனே எல்லாம் கண்காணித்துக் கொண்டான்.

அந் நன்னெறியில் முயல்வதொன்றே அடிகளின் செயலாய் இருந்திருக்கிறது; இயற்கைநெறிக்கு மாறாக முயற்சிகள் சென்றிருந்தால் வாழ்க்கை சிறந்திருக்காது; உயிர்க ளுக்கு முயற்சியென்பது, இயற்கைப் போக்கின் நெறி தெரிந்து இறைவனோடு ஒத்துழைப்பதே!

தந்தை சொக்கநாதபிள்ளை யென்பவர் சைவ வேளாளர்; சுற்றம், அடிகளுக்கு அமைந்த உறவுகள்; ஊர் நாகபட்டினம் பக்கம்; இயற்கை நெறி இவையென்றால், அடிகளின் இனம் உறவு ஊர் மொழி சமயம் முதலியவற்றை வரலாற்றில், வளர்ச்சியில், மாற்றிக்கொள்ள முடியுமா? இளமையில் அடிகளார் ஊற்றம் பெறுவதற்கு இவையெல்லாம் எவ்வளவு துணையாய் உதவியிருக்கின்றன! உதவிய நன்றியைத்தான் மறப்பது பொருந்துமா?

"என்செயல் ஆவது யாதொன்றுமில்லை"

எனவும்,

"உன்செயலே என்று உணரப்பெற்றேன்"

எனவும் வந்த பட்டினத்தடிகளின் வாக்கில் எவ்வளவு உண்மை ததும்புகின்றது!

வாழ்க்கையில் நேர்ந்து வருவனவற்றைப் பயன்கொள்வ திலும், அந்நெறியே சிந்தனையைச் சிறப்பாக்கிக்கொள்வ திலுந்தாம் உயர்ந்தோர் முன்னேற்றமெல்லாம் ஓங்கிக் காணப்படுகின்றன. ஆதலால், எந்தச் சாதி சமயம் ஊர்

உறவு முதலியவற்றையும் இகழ்தல் இயல்பாகாது. நலமும் உயர்வும் அவரவர் சிறப்புச் செயல்களிலேதாம் உள்ளன. மக்கட்கு ஆண்மையாவது இது! வளர்ச்சியாவதும் உண்மைத் தொண்டும் இது!

"நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே!"

என்னும் புறநானூற்று வீர மொழிகள் (187) எவ்வளவு உண்மையாகவும் இயற்கையாகவும் வீறுற்றிருக்கின்றன!

தோன்றிய உடம்பு எத்தகையதாயினும் அதனையே அவரவரும் சிறப்பாக்கிக் கொள்வது போலத், தோன்றிய மொழி சமயம் இனம் இடம் முதலியவற்றையும் அவரவரும் பயன்கொண்டு உயர்த்திக்கொள்வதுதான் நாகரிக வாழ்க்கை யாகும்; மனம் போன போக்கெல்லாம் மாற்றிக்கொள்வதில் ஓர் ஆண்மையுமில்லை.

'வேளாளர் நாகரிகம்' என ஒரு நூலமைப்பும், எதனையும் இகழாத 'பொதுநிலைக் கழகம்' என ஒரு செயல் நிறுவனமும் அடிகளார் வாழ்க்கையில் பின்பு அமைந்தமை எவ்வளவு இயற்கையாயிருக்கின்றன! எவ்வெவற்றை எவ்வெவ்வாறு பயன்கொள்ளவேண்டும் என்பன அடிகளுக்குமுன் எளிதாகவே பிரிந்து நெறிப்பட்டன; சிறந்தன; உறுதியாய்க் கடைப்பிடிக்கப் பட்டன; 'துணையாய் என் நெஞ்சம் துறப்பிப்பாய்நீ' என்று கருதிக்கொண்டு, அடிகளார் இயலுள்ளம் நீர்வழி மிதவையாய், இயற்கை நெறியூடு இணையற்ற விசையுடன் பாய்ந்து சென்றது!

அடிகளார் தோன்றியது ஒரு தனிப் பணிக்கு; தந்தையார் வழியில் அலுவலிற் செல்வதற்கன்று; 12 வயது நடந்துகொண் டிருந்தபோதே 1888 இல் இவர் தந்தையார் காலமாய்விட்டார். இது, மேலும், இவர் தனியுரிமைப் போக்குக்கு இடந்தந்து விட்டது. இறைவன் கண்காணிப்பில் இவர் சிறப்புகள் பெருகிவந்தன.

இம் மண்ணுலகின் இயற்கை மொழியாகிய தமிழும், தமிழ் நெறியாகிய சிவசமயமும் இறைவன் இவர்க்குத் தேர்ந் தளித்தவை. இவர்க்கு இயல்பாக எழுந்த தமிழ் சைவ உணர் வெழுச்சிகளிலிருந்தே இவ்வுண்மையைத் தெளியலாம்; நாகை உயர்நிலைப் பள்ளியிற் படித்துக் கொண்டிருந்த பள்ளிப் படிப்பு

நின்றுவிட்டது. அஃது, ஆங்கிலப் பள்ளியாதலின், ஆங்கில அறிவு நன்குகவே அமைந்திருந்தது. தமது முயற்சியினுல் தமிழ்மொழிப் புலமையோடு ஆங்கிலம் சமக்கிருதம் இரண்டிலும் அடிகள் வல்லமை பெற்ருர் ; தமது 15 வது வயதில் தொடங்கிய தமிழ்ப் பயிற்சி, 21ஆம் வயதுக்குள் சிறந்த கல்லூரி மாணவர்க்கும் தமிழறிவும் தமிழ்ச் சுவையும் பதிக்கும் வகையில் ஓங்கியது.

நாகை நாராயணசாமி பிள்ளை என்னும் இயற்றமிழாசிரியரிடம் இவர் தமிழ் கற்ருர்; சென்னைச் சோமசுந்தர நாயகர் என்னும் சித்தாந்த ஆசிரியரிடம் சைவசித்தாந்தம் பயின்ருர். இவை இவர் இளமை நெறிகளை எடுத்துக்காட்டுகின்றன.

தமிழாசிரியர் தொடர்பால் அறிவியலாசிரியர் திருவனந்தை சுந்தரம் பிள்ளையுடன் நேயமும், சித்தாந்த ஆசிரியர் தொடர்பால் அறமன்றத் தலைவர் சிற்றூர் நல்லசாமி பிள்ளையுடன் பழக்கமும் வாய்த்தன; அலுவலிலுள்ள பெருமக்கள் பலர் தொடர்பிலும் இவர் பழக நேர்ந்தது.

சுந்தரம் பிள்ளைக்குச் செய்யுட் கடிதம் எழுதியும் நாகையில் 'இந்து மதாபிமான சங்கம்' நிறுவியும் தமிழ்சமயத் தொண்டுகளை இவர் நிகழ்த்தினுர். பேச்சளவிலன்றிச் செயலிலும் இவர் உணர்வு சென்றது. இவருடைய இளமைத் துடிப்பும் எழுச்சியும் இவற்ருல் விளக்கமாகும்.

**இளமையிற் கல்வி :**

கல்வி இவர்க்கு ஆழமாகவும் அகலமாகவும் சென்றது. அதனுல் சங்கத் தமிழ் நூல்களில் உள்ளம் இழுப்புண்டு போயிற்று; பிற்கால நூல்களில் அவ்வளவாக உள்ளம் பிணிப்புறவில்லை. அங்ஙனமே சைவ சித்தாந்தத்திலும் இவர் ஊக்கமாய்ச் சென்றிருக்கிருர். காரணம், உண்மைத் திறம் என்னும் இயற்கைத் திறம் அவ் விரண்டிலும் செழித்து நிற்பது தான்.

மேலும், பழந்தமிழின் சொற்பொருட்சுவை இவரை மிகவும் ஆட்கொண்டிருக்கிறது; 'கற்பனை' யென்பது இச் சுவைத் திறந் தான்; உண்மையை மறைப்பதன்று; சித்தாந்தத்தின் நடை முறை யழகுகளிலும் இவருள்ளம் பறிபோயிருக்கிறது. இதனுல் இனிமைத் திறம் என்னும் சுவைத் திறமும் வளர்ந்தது. உண்மையும் இனிமையும் விரவிய இவ்வெழுச்சியினுல், மாருய் நிற்கும் செயல்களில் உள்ளம் ஈடுபடவில்லை; எதிர்ப்பாகவே இருந்திருக்கிறது. செயலுள்ளம் உள்ளவரானதனுல் மறுத்து நிலைநாட்டும் திறம் நாளுக்கு நாள் வளர்ந்தது.

நினைவு சொல் செயல்களில் இளமையிலிருந்தே மெய் வேறு பொய் வேருக எல்லாம் பிரிந்து தெரிந்தன. பொய் எனத் தோன்றியவற்றை எதிர்த்து மறுப்பதும் மெய்யெனத் தெரிந்தவற்றைத் தழுவி விளக்குவதும் இவர் வழக்கமாயிற்று; இவ் வியல்பு எதனுலும் தடை படுவதுமில்லை; இவ் வகையில் யார்க்கும் இவர் அஞ்சுவதுமில்லை. இதற்கேற்ற பழக்கத்தில் இவர் நெடுகப் பழகிவந்திருக்கிருர்.

இச் சிறப்பினுல் இவர்க்கு உணர்ச்சியும் எழுச்சியும் மிகுந்து இம் முறைமைக்கேற்ற செய்யுள் நடை உரை நடைகள் கைவந்தன; மறுக்கும் உணர்ச்சியினுல் தமிழ்நடை மிகவும் வீறுற்றது. பொருளியல்புகளை உண்மை முறையில் விளக்கு தலும், மாறுகளை எதிர்த்துத் தாக்குதலுமான தமிழ் நடை யுடையவர்கள் இவர்க்கு முன்னுல் யார் யார் இருந்தார்களோ அவர்கள் நூல்களெல்லாம் இவர்க்கு இனித்தன; சிவஞான முனிவரின் மாபாடிய நடை கைவந்தது; சோமசுந்தர நாயகரின் தருக்க நெறிகளும் மறுப்பு வகைகளும் ஒன்றின; எழுத்து பேச்சு இரண்டிலும் இவ் வியல்பு கிளர்ந்தது.

அடிகளின் கிளர்ச்சியிலும் எழுச்சியிலும் தமிழக முழுதும் பெரும்பகுதி அப்போதே ஈடுபட்டுவிட்டது; கல்லூரிப் படிப் புடையவர்களிற் பெரும்பாலார் இவர் வயம்; பகுத்தறிவு மிக்கவர்கள், ஆராயும் பான்மையுடையவர்கள், இளைஞர்கள், புதுமைகளைக் கண்டு மகிழ்கிறவர்கள், செயல் துடிப் புடையவர்கள் இவரைச் சார்ந்து நின்றனர். எப்போதும் இவர்க்குப் பொய் மெய்களைப் பிரித்துரைக்கும் போர்க் கோலந் தான்! 'சச்சன பத்திரிகை' மறுப்பு, 'முதற்குறள் வாத நிராகரணம்' (1898), 'சோமசுந்தரக் காஞ்சி யாக்கம்' முதலிய மறுப்புரைகள் கொண்டு இளமையிலேயே இவர்க்கமைந்து விட்ட எதிர்ப்புத் துடிப்புகளை இனிதறியலாம்.

தமிழ் மறையாகிய திருக்குறளில் அடிகளுக்கு அப்போதே மிக்க ஈடுபாடுண்டானதற்குக் காரணம், அந்த நூல், உலக வாழ்க்கையின் பொய் மெய்களை ஆராய்ச்சியோடு பிரித்து விளக்கி ஞானவொளி வீசினமையே. இயல்பாகவே சொற் பொருட்சுவைகளிலும் கலை நலங்களிலும் நயங்களிலும் ஈர்ப் புண்டிருந்த அடிகளின் உள்ளம் திருக்குறட் சுவைத்திறத்திலும் கலைக் குறிப்பிலும் நூல் நயங்களிலும் உணர்ச்சி கொண்டது வியப்பன்று!

திருக்குறட் சிறப்புப் பாயிரத்தில்,

'பொய்ப்பால பொய்யேயாய்ப் போயின,பொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலில்

*தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்*
*வையத்து வாழ்வார் மனத்து''*

என்பதும் ஒன்று; திருக்குறளைப் பற்றி அவைக்களங்களில் அடிகளார் விரிவுரை நிகழ்த்துங் காலங்களில் பெரும்பாலும் இச் செய்யுள் அவர்கள் வாக்கில் வெளிப்படும்.

அடிகளுக்குக் கைவந்த செய்யுள் நடை உரை நடைகளி லெல்லாம் இயல்பு நலம், சுவைத் திறம், மறுப்புணர்வுகள் மிகுந்திருத்தலைக் காணலாம். இளமையில் நேர்ந்த இச் சிறப்புக்கு வகைக் கொன்றாக இங்கே எடுத்துக் காட்டுவது பொருந்தும்.

**1.** நாகை வெளிப்பாளையம் சைவசித்தாந்த சபையை நிறுவியவர் மதுரை நாயகம்பிள்ளை என்பவர்; இவர் அடிகளுக்கு அக் காலங்களில் உற்ற துணையாயிருந்து உதவி வந்தார்; சோமசுந்தர நாயகரிடம் அடிகளை ஆற்றுப்படுத்தியவரும் இவரே! இவ் வருமையாளர் மறைவின்போது அடிகள் உள்ளங் குழைந்து சில இரங்கற்பாக்கள் பாடியிருக்கிறார்; அவற்றில் ஒன்று :

*''சின்னஞ் சிறிய காலத்தே சிறிய தந்தை இழந்தேற்குக்*
*கன்னல் மொழிசேர் தமிழ்க்குரவர் இருவரோடு காதல்மிகும்*
*அன்னை யனைய நின்றனையும் அரிய துணையாய் அடைந்திருந்தேன்*
*பின்னை இருவர் பிரிந்தேகப் பெரிய துணையாய்ப் பிறங்கினையால்''*

இச் செய்யுளில் 'இயல்பு நலம்' ஆற்றொழுக்காய்ச் சிறந் திருக்கிறது; சீர்களுக்காகச் சொற்கள் பிரிக்கப்படவில்லை. சீர்ப் பிரிப்பின் வழியே சொற் பிரிப்புத், தனித் தனிச் சொற்களாய்ச் சென்றிருக்கிறது.

இதனோடு, மேலெடுத்துக் காட்டிய திருக்குறட் சிறப்புப் பாயிரப் பாடலையே ஒப்ப வைத்துப் பார்க்கலாம்; அதன் மூன்றாவது வரி, 'தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்' என்று வருகின்றது; 'திருவள்ளுவர்' என்பது குறிப் பெய ரானதனால் அஃது சீருக்கேற்றபடி ஒடிவது ஒருகால் பொருந்த லாம். ஆனால் 'செப் பியகுறளால்' என்ற இடத்தில் 'செப்பிய' என்னுஞ் சொல்லும் முறிந்துவிட்டது. 'தெய்வப் பெரியார் திருவள் ளுவர்குறளால்' என்பது போன்ற தொடர் ஏதேனும் அங்கே வந்திருந்தால் 'இயல்பு நலமும்' மேம்பட்டிருக்கும்; மோனையழகுங் கூடிவந்திருக்கும். அக்காலச் சான்றோர் சிந்தனையில் இவையெல்லாம் முதன்மை பெறவில்லை. அடி களுக்கு இளமையிலேயே வாய்த்த செய்யுள் நடை இயல்பு நலத்திலும் சிறந்ததாய் இருக்கிறது!

2. சொற்சுவை பொருட்சுவை இனிமைகளுக்குக் கடல் போல் உள்ள பலவற்றில் ஒரு செய்யுள்:

"இனியார் எனக்கிங் கினியார் இயைந்தார்
முனியார் முனிந்து மொழியார்—பனிமொழியாய்!
புள்ளொன் றிவர்ந்து புகமொற்றித் தங்கர்க்கு
நள்ளிருட்கட் சென்றார் நமர்."

அடிகளார் தம் இளமையில் 23ஆம் வயதிற் செய்த 'திருவொற்றி முருகர் மும்மணிக்கோவை'யில் இச் செய்யுள் வருகின்றது. வெண்டளையால் அமைந்த இவ் வெண்பாவிலும் சீர்களால் சொல் முறிப்பு ஏற்படவில்லை. அதோடு இவ் வாக்கில் தமிழின் இனிமை சொற்சுவை பொருட்சுவைகளால் விஞ்சி நிற்கிறது! முதல் வரியில், 'இனிமேல் யார் எனக்கு இங்கு இனியவர்' என்னுங் கருத்தில் 'இனியார் இனியார்' எனவரும் சொற்சுவையும் அதன் பொருட்சுவையும், அதன்பின், இரண்டாவது நான்காவது வரிகளில் முனிதலாகிய மன வேறு பாடும் முனிந்து சொல்லுதலாகிய சொல் வேறுபாடும் இல்லாதவர் நள்ளிருளிற் சென்ற செயல் வேறுபாடு கொண்டார் என நினைவு சொல் செயல்களைப் பற்றிவரும் நயமும் புலப்படும்; 'கூருமற் சந்நியாசங் கொள்' என்றதுபோல இச் செயல் வேறு பாடு காணப்படுகின்றது. மூன்ருவது வரியில், 'புள்ளொன் றிவர்ந்து' என்றதனுல், அவர் சென்ற விரைவும் தெரிந்தது; 'நவில்தொறும் நூல்நயம்' இச் செய்யுளில் வரிதோறும் சொல் தோறும் விளங்குகின்றது; இங்ஙனம் அடிகளின் செய்யுட்சுவை பல.

3. மறுப்புத் திறத்துக்கும் ஓர் எடுத்துக்காட்டு: சித்தாந்த ஆசிரியர் சோமசுந்தர நாயகர் மறைவின்போது அடிகளார் உள்ளம் உருகிச் சங்ககாலத் தமிழ்க் கருத்தில் காஞ்சிப்பாக்கள் சில இயற்றினர்; அதிற் குற்றங்காணப் புகுந்தார்க்குக் 'காஞ்சியாக்கம்' என அடிகளார் ஒரு மறுப்பும் வெளிப்படுத்தினர்; இது நடந்தது அவர்க்கு 25ஆம் வயதில் (1901 முற் பகுதியில்); உடன் மாணவராகிய நில அளவையர் சிங்காரவேல் முதலியார் இவ் வெளியீட்டின் அச்சுச் செலவுக்கு ஓரளவு பொருளுதவி செய்தார் என்றுந் தெரிகிறது; இஃது உரை நடை:

"...இனி, சோமசுந்தரக் காஞ்சியின் மேலெழுந்த மறுப் பிற்குப் பிரதி கண்டனமாக வெழுந்த இவ்வெதிர் மறுப்பு அப் போலி மறுப்பின்கட் சொல்லப்பட்ட குற்றங்கள் முழுவதூஉம் பரிகரித்து அக் காஞ்சியினைத் தொல்லாசிரியர் இலக்கண நூ லிலக்கிய நூ றருக்கநூற் சாத்திர நூன் முதலியவற்ருெடு

படுத்து ஆக்கிக் கொண்டமையிற் சோமசுந்தரக் காஞ்சியாக்கம் என்னும் பெயர்த்தாயிற்று. இவ்வாறு அப் போலி மறுப்பினையு மறுக்குமுறையா லதனை யெழுதினவர் நாற்பொருளறிவு முழுவதூஉம் வழுவிய மயக்க வறிவாமென்ப தினிது விளக்கினும். இனியவரெழுதிய வாக்கியங்கள் மேலே காட்டிய பத்துவகைக் குற்றங்களுஞ் செறிந்து சொற்ளுறும் பிழைபட்டமையால் அவற்றை யாராய்தல் ''மணற் சோற்றிற் கல்லாய்தல்'' போற் பயனின்றாய் முடியுமென்பது பற்றி யவற்றை விடுத்தாம்.''

**கலையுணர்வு :**

மற்றொரு சிறப்பும் அடிகளின் உள்ளத்தில் அப்போதே எழுந்து விளங்கியது. அதுதான் கலையுணர்வு! உண்மையும் இனிமையும் ஒன்று சேர்ந்தால் கலைகள் தோன்றும். அடிகளார் இயலுள்ளம் இவ் விரண்டாலும் நிரம்பியது! பல தலையான கலைகள் அரும்பின.

'நாடகத் தமிழ்' என்பது பற்றி ஓர் இனிய கலை விரிவுரை, திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் 12-9-1896இல் 20-வது வயதிலேயே நடந்தது. கல்லூரியின் அறிவியற் பேராசிரியர் அவைத் தலைவர்; அவரும் அவையினரும், 'இவ்வளவு இளம் வயதிலேயே நன்கமைந்திருக்கிறதே' என்று போற்றிப் பாராட்டினர்! 21ஆம் வயதில், 'சித்தாந்த தீபிகை' என்னுந் திங்களிதழ் இவர் எழுத்துக்களோடு வெளியிடப்பட்டது.

இக் கலைத் திறங்கள், இவர் வாழ்க்கையில், 'சாகுந்தல நாடகம்,' 'சாகுந்தல நாடக ஆராய்ச்சி' 'மக்கள் நூறாண்டுயிர்வாழ்க்கை' 'மரணத்தின்பின் மனிதர் நிலை' 'அறிதுயில்' 'மனக்கவர்ச்சி' 'தொலைவிலுணர்தல்,' முதலிய கலை நூல்களும், பல தலையான மறுப்புக் கலைகளும் 'Oriental Mystic Myna' 'The Ocean of Wisdom' 'ஐந்தெழுத்து மறை' 'யோகம்' 'அச்சுக் கலை' 'நூலகக் கலை' முதலியனவும், 'தமிழ்ச் சொல்லுற்பத்தி' 'மெய்ந்நல விளக்கம்' முதலிய கலையெழுத்துக்களும் தோன்றக் காரணமாயின.

சோமசுந்தர நாயகர் கூட்டுறவால் அடிகள் தம் 21ஆம் ஆண்டில் சென்னைப் பக்கம் வர நேர்ந்தது. அவ்வளவு இளம் வயதிலேயே சோதனைகளில் புலமைத் திறம் வெளிப்பட்டு, 9-3-1898-லிருந்து அடிகள் கிறித்துவக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியரானார். கல்லூரியில் 'முல்லைப்பாட்டு' 'பட்டினப் பாலை' முதலிய சங்கநூற் பாடங்கள் நடந்தன. இவர் கற்பித்தலில் மாணவர் பலர் கவர்ச்சி யுற்றனர்; இவர் உரை முறைகள், பழைய உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் முறை

களுக்கு வேருய்ப் புதுத்திறமாய் ஆற்றெழுக்காய் இயல்பு நெறியில் மெய்ம்மை கூடி இருந்தது; மாணவர் சிலர் தம்முட் கூடிப் பொருளுதவி புரிந்து, 'முல்லைப்பாட் டாராய்ச்சியுரை', 'பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை'கள் அச்சிட்டு வெளிவந்தன; இவை யிரண்டும் சிறந்த இலக்கியச் செல்வங்கள்! பழந்தமிழ்ப் பாட்டின் இயல்புகள் சுவை நயங்கள் எல்லாம் இனிது விளக்குவன.

13 ஆண்டுகள் கிறித்துவக் கல்லூரியிற் பேராசிரியராய் இருந்த இவர், கல்லூரியில் தமிழ்க்கு முதன்மை தளர்ந்த காலத்தில், 10-4-1911இல் அதனை விடுத்தார். இயற்கை நெறிப்படி தம் உரிமையில் வாழ்நாள் கழிக்க விரும்பினுர். எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் ஒருவருக்கே தொண்டுபூண வேண்டுமென்று உறுதி செய்துகொண்டார்; கடவுளின் இயற்கைத் தமிழையும், தமிழ் நெறியாகிய சிவசமயத்தையும் பரவச் செய்யத் திட்டம் வகுத்தார். சென்னைக்கு அருகில் இயற்கை நலம் நிரம்பிய பல்லாவரத்தை இத் தொண்ட நாட்டிலேயே தேர்ந்து, தம் தொண்டுகளைத் தொடங்க முற்பட்டார்.

1-5-1911இல் பல்லாவரம் வாழ்க்கையை அடிகள் மேற் கொண்டார்; பொதுநிலைக் கழகம் நிறுவினுர்; காவியாடை உடுத்துத் துறவுக்கோலம் பூண்டார்; நிறுவனத்துக்கு ஒரு மாளிகை அமைத்தார்; தனி அச்சகம் வைத்தார்; 'அறிவுக் கடல்' என்னும் இதழை நடத்தி அதன் வாயிலாகப் பல தமிழ் நூல்களை வெளிப்படுத்தினுர்; இடையிடையே தமிழகத்திலும் இலங்கையிலும் உலவி இனிய சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர். ஒரு நிலையான நெறியில் அதுமுதல் பெருந்தண் வாழ்க்கை செயலுருக்கொண்டது!

விரிவுரை நிகழ்ச்சிகள் :

அக் காலங்களில் அடிகளாரின் இந் நற்செயல்களுக்குத் திருவரங்கம் பிள்ளை என்னுந் தொண்டுவல்லார் துணையாய் விளங்கினுர். இலங்கையிலும் தமிழகத்திலும் நடந்த அடிகளின் சொற்பொழிவுகள், காந்தம்போல் மக்களை ஈர்த்தது. அடிக ளார்க்குச் செல்வக் கொழிப்புப் பெருகியது.

அடிகளார் தோற்றமும், அழகும் இளமையும் குயில் போன்ற குரலினிமையும் தமிழும் நடையும் ஆராய்ச்சியும் தொண்டும் ஆங்கில சமக்கிருத அறிவும் எங்குங் கவர்ச்சி மிகுத்தன.

திருவரங்கனர், மாதந்தோறும் ஆண்டுதோறும், பகுதித் தொகையாகவும் மொத்த நன்கொடையாகவும் காணிக்கைகள் திரட்டி அனுப்பிவந்தார். நூல்களை, இதழ்களை விலைப்படுத்தி உதவினர்.

வாழ்க்கை யறம் :

அடிகள் குடும்பம் பெரியது; மனை வாழ்க்கைக்குரியவராகச் சவுந்தரவல்லி அம்மையார் வாய்த்தார்; உழைப்புமிக்கவர்; அடிகளார் தொண்டுக்குத் தம்மை அவர் ஒப்படைத்துக்கொண்டார். திருஞானசம்பந்தம், மாணிக்கவாசகம், திருநாவுக்கரசு, சுந்தரமூர்த்தி எனச் சமயகுரவர் நால்வர் பெயராலும் அழைக்கப்பெற்ற புதல்வர்கள் முதலிய ஆண்மக்களும், நீலாம்பிகை, திரிபுரசுந்தரி என உமைப்பிராட்டியார் பெயரால் அமைந்த புதல்வியர் முதலிய பெண்மக்களும் அடிகளுக்குத் தோன்றினர். திருநாவுக்கரசு என்னும் புதல்வரும், நீலாம்பிகை என்னும் புதல்வியாரும் புலமை வாய்ந்தவர்கள். திருவரங்கனர் நீலாம்பிகையைக் காதலித்து மணங்கூடினர்; திரிபுர சுந்தரியைக் குஞ்சிதபாதம் என்னும் புலவர் மணந்து கொண்டார். அவர்களுக்கும் புதல்வர்களுக்கும் மக்கட் செல்வங்கள் உண்டு.

இங்ஙனம் மனைவாழ்க்கையில் விளங்கினுலும், அடிகளாருடைய தமிழ்த்தொண்டும் சிவத்தொண்டும் இறுதிவரையில் இடையருமல் நிகழ்ந்து வந்தன; அடிகளாரின் உறுதியுள்ளமே இதற்குக் காரணம்!

வருவாயிற் பெரும்பகுதியை அறிவுநூல்கள் வாங்குவதிலும் புதிய நூல்கள் எழுதுவதிலும் அவற்றை அச்சிட்டுப் பதிப்பதிலும் செலவு செய்ய அடிகள் தயங்குவதில்லை; குடும்பச் செலவுகள் அதற்கேற்றபடி நடந்துவந்தன. இறைவனது படைப்பின் நோக்கமே எந்நிலையிலும் இனிது நிறைவேறி வருதல் இயல்பாயிற்று.

தனித்தமிழ் இயக்கம் :

தனக்குவமை இல்லாதான், தனக்குவமையில்லாத தனித் தமிழை இவர்க்கு அமைத்துதவினுன்; 'தமிழ்' என்னும் சொல்லே, 'தனித்தது' என்னும் பொருளுடையது; 'தமி' அதன் பகுதி; 'ழ்' என்னும் சிறப்பெழுத்தை ஏற்றுத் 'தமிழ்' என்னுஞ் சொல் வீறி எழுந்தது; 'தமி' என்னும் பெயர் சிவத்தையும் குறிக்கும்; அப் பெருமானும் தனித்தவர். சிவஞான

போதத்தில் இச் சொல் இக் கருத்தில் வருகின்றது. சிவநெறியைத் தன்னுட்கொண்டது தமிழ்! சொல்லே தனித்ததென்னுங் கருத்தில் வருதலின், 'தனித் தமிழ் இயக்கம்' புதுவதன்று;

தனித் தமிழ் உணர்வு அடிகளார்க்கு உள்ளொளிச் சிறப்பாய் ஓங்கியது. புலமைப் புதல்வி நீலாம்பிகையாருடன் ஒரு நாள் தமது மாளிகைத் தோட்டத்தில் உலவி வரும்போது,

"பெற்ற தாய்தனை மகமறந் தாலும்,
பிள்ளை யைப்பெறுந் தாய்மறந் தாலும்,
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்,
உயிரை மேவிய உடல்மறந் தாலும்,
கற்ற நெஞ்சகம் கலைமறந் தாலும்,
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவ ருள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே"

என்னும் திருவருட்பாவை அடிகளார் பொருளுணர்ச்சியுடன் சுவையூறிப் பாடிவந்தார்; பாடி வந்தவர் உடனே பாட்டை நிறுத்திவிட்டு,

"என்ன நீலா! இப் பாடலிலுள்ள 'தேகம்' என்னும் சமக்கிருதச் சொல், 'யாக்கை' என்னுந் தனித் தமிழ்ச் சொல்லாக அமைந்திருந்தால் பாடலின் தமிழ்ச்சுவை இன்னும் எவ்வளவு சிறப்பாயிருக்கும்; இப் பாடலில், மற்றச் சொற்களெல்லாம் தனித்தமிழ்ச் சொற்களாகவே வந்திருக்கின்றன; அவை எவ்வளவு இன்சுவையாயுள்ளன!"

என்று சுவை யுணர்வோடு கேட்க, நீலாம்பிகையார்,

'அப்படியானால், இனி நாம் தனித் தமிழிலேயே பேசியும் எழுதியும் வரலாம்'

என்று ஆர்வம் பொங்கக் கூறினர் என்ப.

அதுமுதல் அடிகளாரிடம் தனித்தமிழ் இயக்கம் கால் கொண்டு விட்டதென்று தெரிகிறது.

மாளிகைத் தோட்டத்தில் அறிவறிந்த புதல்வியாருடன் நிகழ்ந்த இந்நிகழ்ச்சி, தனித்தமிழ் இயக்கத்துக்கு ஒரு பெருந் தூண்டுகோலாய் உதவியது! இயக்கம் வீறியது! வருவார் போவார் மாணவரிடமெல்லாம் தமிழே நிலவியது! சொற்பொழிவுகள் பாடங்கள் நூலெழுத்துக்கள் எல்லாம் தனித்தமிழ் ஆயின. வரவரத் தமிழகம் முழுதும் இவ் வியக்கம் பரவியது! எழுத்தாளரெல்லாம் பெரும்பாலும் தனித் தமிழ் நடையிலேயே இதழும் நூல்களும் எழுதத் தொடங்கினர்; தமிழ்நடை தமிழாகத்தானே இருக்க வேண்டும்;

இவ் வியக்கம் இவ்வளவோடு நிற்கவில்லை; தமிழ்மொழி யின் பழமை இயல்பு, தமிழகத்தின் தொன்மைத் தன்மை, தமிழ் மக்களின் குடிமை குடிமைச் செய்கைகளும்,

உலக மக்களில் தமிழரென்பவர் யார்? அவர்கள் நாகரிகம் யாது? மற்றவரோடு தமிழரின் தொடர்புகள் எப்படி? தமிழ் நூல்களின் அருமைகள் பெருமைகள், தமிழ்ச் சொற்களின் வளர்ச்சி, அவற்றின் சொற்பொருளாராய்ச்சிகள், தமிழ் அகர வரிசை என்பனவும்,

தமிழின் கலைகள், கலைகளின் முடிமணியாகிய சமயம், சைவசித்தாந்தத்தின் மாட்சி, உலக முழுவதும் அதன் ஆராய்ச்சிகள், பல்கலைக் கழகங்களில் அதற்கு இடம், சிவபிரான் வணக்கம், திருக்கோயில்களின் அமைப்பு, கோயில்களின் வழிபாட்டு முறைமை விழாக்கள் திருமுறை ஆராய்ச்சிகள், தமிழ் மந்திரங்கள், தமிழர் சடங்குகள் என்பனவும்,

தமிழாசிரியர் பெருக்கம், தமிழ் மொழிக்கு உரிமை, இல்லப் பெயர், தெருப்பெயர், ஊர்ப்பெயர், தவப்பெயர், தொடர்வண்டி நிலையங்களின் பெயர், மாநிலப் பெயர் மாற்றம், தமிழ் அலுவலகங்கள், அரசு அலுவலகம், பள்ளி கல்லூரிகளில் தமிழுக்கு முதன்மை, அயல்மொழித்தடை, தமிழ் அரசு ஆட்சி, பாண்டிய சோழ பல்லவப் பெயர் விளக்கம், பழந்தமிழர் என்னும் வகுப் பினரின் உயர்வு, ஏழை எளியவர்களுக்கு வாழ்க்கை நலம் என்பனவும்,

பிறப்பால் உயர்வு தாழ்வு பாராட்டாமை, திருக்குறள் தமிழ்மறை என்பதைப் போற்றிக் கொள்ளல், அது உலகப் பொதுமறை எனச் சிறந்து பல நன்மொழிகளிலும் மொழி பெயர்ப்பு நடத்தல், உலகத் தமிழ் மாநாடுகள் முதலியனவும் நாளும் நிகழ்ந்துவரக் காண்கின்றோம்.

இவ்வளவுக்கும் இக் காலத்தின் மூலகாரணம் ஆசிரியர் மறைமலையடிகளார். அவர் பிறப்பு எவ்வளவு அருஞ்செயல் களுக்கு உரியதாய் விட்டது! திருக்கழுக்குன்றத்து வேதமலைப் பெருமான், ஆசிரியர் மறைமலையடிகளாரைப் படைத்து இயக்கி, எவ்வளவு மாறுதல்களுக்கும் புதுமைகளுக்கும் இடமாக்கி விட்டார்!

இயக்க வரலாறு:

இத் தனித்தமிழ் இயக்கத்துக்கு முதல் முதல் வித்திட்டவர், தமிழ்மறைக் குரவர் திருவள்ளுவர். தொல்காப்பியம் சங்கநூல் முதலியவற்றால் அது நன்கு முளைத்தது.

சென்ற நூற்றுண்டின் முற்பகுதியில் (1823—1874) தமிழகத்தின் அருட்பெருமானுக விளங்கிய இராமலிங்க அடிகள் கனிவுடன் நீர் வார்த்து உதவினுர். அவர் திருவருட்பாவில்,

> "இலக்குளநீர் தழைத்ததனில் இடங்கருற அழைத்ததன்வாய்
> தலக்குதலை மதலையுயிர் தழைப்பஅழைத் தருளியநின்
> கலைக்கும்வட கலையின்முதற் கலைக்கும்உறு கணக்குஉயர்பொன்
> மலைக்கும்அணு நிலைக்கும்உரு வன்றெண்டப் பெருந்தகையே"

என்பது முதலிய புரட்சிப் பாடல்கள் வருகின்றன. பாடல் மட்டுமன்றி அவர் செய்த சோதிவழிபாடு, அருட்பெருஞ் சோதிமுழக்கம், சோதிகோயில், வடலூர் என்னுந் தனித் தலம், சமரச மார்க்கம் முதலிய அருஞ்செயல்களெல்லாம் மிகவும் புரட்சியானவை; இப் புரட்சிகளில் ஆசிரியர் மறைமலை யடிகளார்க்கு இணக்கம் மிக்கது! 'அருட்பா மருட்பா' போரில் ஊக்கமாய்க் கலந்துகொண்டார். இராமலிங்க அடிகளாரின் அடியொற்றிப் பல்லாவரத்திலும் 'பொதுநிலைக் கழகம்' அமைத்தார். தனித்தமிழ் ஆராய்ச்சிகள் மிகுந்தன; இயக்கம் அருளூரங் கொண்டது!

பின்னர்த், திருவனந்தபுரம் அரசர் கல்லூரிப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை 'மனோன்மணியம்' என்னும் தமது அழகிய நாடகநூற் பாடல்களால் செடிக்குச் சிறப்பாக வேலியிட்டுக் காத்தார்.

> "பல்லுயிரும் பலஉலகும் படைத்தளித்துத் துடைக்கினும்ஓர்
> எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்
> கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையா ளமும்துளுவும்
> உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
> ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாஉன்
> சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே."

என்பது அவர் பாடல்; தமிழகத்தில் செடி செழிப்புக் கண்டது! சிதையாதாயிற்று! மறைமலையடிகள் சுந்தரம்பிள்ளையோடு நேரிற் பழகி அவர் பாடற்கருத்தில் உள்ளந்தோய்ந்து முறுகி யெழுந்தார்.

தமிழ் நூல்கள் சமக்கிருத நூல்கள் எல்லாவற்றிற்கும் அடிகள் காலம் வகுத்துக் கொண்டார்; முன்பின் சொல் வழக்குகள் நூல் வழக்குகள் எல்லாம் பிரிந்து தெரிந்தன; மொழியாராய்ச்சி, சொல்லாராய்ச்சி, பொருளாராய்ச்சிகளில் மிக விரிவாகச் சென்றுர்; இவ்வாராய்ச்சிக் கடலில் ஊக்கமாய் இறங்கிக் குடைந்து குடைந்து தாராளமாய் நீந்தி அளாவினுர். இப் பரந்த ஆராய்ச்சி முடிபுகளே இயக்கத்துக்கு எருவாய் உதவின; பல வேறு எருக்களைச் செடிக்கு இட்டுஇட்டு அதனை மிக நன்றாக அடிகள் இயக்கிவிட்டார்; தனித்தமிழ் இயக்கத்தை வளர்த்தவர்களில் இப் பெருமானே விரிவாக ஈடுபட்டு உரங்கள்

பல கண்டவர். ஒன்றிலிருந்து ஒன்ருக நாடெங்கும் பல செடிகளைப் பெருக்கித் தழைப்பித்து மரமாக்கிப் பலவகையான மணங்கமழ் மலரும் இன்சுவைப் பழமும் உண்டாகச் செய்து அனைவர்க்கும் வழங்கினுர். இயக்கம் பம்பிப் படர்ந்தது.

இடையே பலப்பல அரசியல் தலைவர்களும் செடிகளைச் சுற்றிக் கொத்திக் களைகட்டுப் பாதுகாவல் பணிசெய்தனர்; அடிகளார் ஆராய்ச்சி முடிவுகள் எல்லார்க்கும் வழிகாட்டியாய் இருந்தன.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் அதன் ஆட்சித் தலைவர் சுப்பையா பிள்ளையும் அடிகள் வழிநின்று பெருந் தொண்டாற்றி உலகமெல்லாம் இயக்க நிழல்களைப் பரவச் செய்து வருவதால், இயக்கம் எங்கும் வேரோடி வளர்ந்து விளங்கிப் பயன் மிகுத்து வருகிறது.

இளவழகனுர் பேறு :

அடிகளார் தமிழகத்தின் தலைவரானுர்; தமிழகத்தின் புலவர் பெருமக்களெல்லாம் இவர் திறத்தில் ஈடுபடுதலையே மேம்பாடாகக் கண்டனர்; எல்லாப் பேரவைகளும் அடிகளார் தலைமையை விரும்பிப் பெற்றுச் செயலுற்றன, சிறந்தன. திரு.வி.க. போற்றிப் பாராட்டியது போல் 'அடிகளே தென்னுடு, தென்னுடே அடிகள்' என்னும்படி நிலைமை விளங்கியது, ஓங்கியது!

அடிகளுக்கு வயது 44 ஆயிற்று. புலமை, செயல், நடை, செல்வாக்கு அனைத்தும் இந் நிலையிற் கனிந்து நின்றன. தக்க பணிகளில் அடிகள் மும்முரமாய் ஈடுபட்டு வந்தார். எங்கும் அவர் பேச்சும் புகழும் மேலோங்கின!

கனிந்து தீஞ்சாறு சுடர் வீசிய அப்பருவத்தில் ஒரு சிறந்த நன்னுள்!

அக் காலத்தில் பல்லாவரத்தை அடுத்த சைதாப் பேட்டையில், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் 'குப்புசாமி' என்னும் அன்பரொருவர் பயின்றுகொண்டிருந்தார். அடிகளாரைப் பற்றி அவர் ஆர்வமாய்ப் பேசுவார்; அவர் ஊர் வாலாசாபாத்து.

ஒருநாள் அவர் மிகக் கிளர்ச்சியாயிருந்தார். 'சென்னை இராயப்பேட்டையிலுள்ள பாலசுப்பிரமணிய பத்த சன சபைக்கு அதன் ஆண்டு விழாத் தலைவராக ஆசிரியர் மறைமலையடிகளார் வரப் போகிருர்; அடிகளார் மிகப் பெரிய படிப்பாளி; ஆங்கிலமும் சமக்கிருதமும் வல்லவர்; ஆராய்ச்சி மிக்கவர்; காட்சிக்கு அழகாக இருப்பார்; குரல் குயில்போல் இனிதாக இருக்கும்; பெரிய நூல்நிலையம் உடையவர்; உடலை நன்ருக ஓம்பக்

கூடியவர்; பெருந்தலைவர்; அவர் வாய்மலர்ந்து அருளும் அருளுரைகளை இன்றும் நாளையும் செவிவாயாக மாந்தலாம்; தமிழகத்தின் அறிஞர் பலரும் அடிகள் தலைமையிற் பேசப் போகிறார்கள்! பேரவையில் தக்கவர்களையெல்லாம் பார்க்கலாம்' என்று சொல்லிச் சொல்லித் துடித்துக் கொண்டிருந்தார். நேரம் நெருங்க நெருங்க அவர் மிகக் கிளர்ச்சியாய்த் தோற்றினார்.

அங்கு உடன் பயின்று கொண்டிருந்த யான், இம் மாட்சி களில் உந்தப் பெற்றேன். எனக்கு அப்போது வயது 16; (1920-ம் ஆண்டு) இராயப்பேட்டை சபைக்கு அன்பர் குப்புசாமி யோடு கூடவே சென்றேன். அடிகளார் பேரவையில் நின்றபடி ஓங்கார வடிவு காட்டி எதிர்முகத்தில் விரிவுரை செய்து கொண் டிருந்தார்; அடிகள் காட்சியை நேரிற்காணும் பேறு பெற்றேன்.

—(தொடரும்)

## மாண்புமிகு மாணவர் எழுதிய மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்றுமாட்சி பற்றிய மகிழ்ச்சி யுரை

*செந்தமிழ்ச் செல்வியின் பொன் விழாவும் தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளார் நூற்றாண்டுப் பிறந்த நாள் விழாவும் 1976 ஆவணித் திங்களில் ஒருங்கே நிகழவிருப்பதால் செல்விப் பொன்விழா ஆண்டைக் குறிக்கும் 50ஆம் சிலம்பு ஒவ்வொரு பரலிலும் மறைத்திரு மறைமலையடிகளார் வரலாறு இடம் பெற்று நிறைவுறுதல் வேண்டு மென்பது எனது பெரு விருப்பம். எனவே செல்வி சிலம்பு ௫௭. பக்கம் ௩௭௪ இல்.*

*"முதுபெரும் புலவர் டாக்டர் சாமிநாதையர் அவர்கள் தம் வணக்கத்துக்குரிய மாபெரும்புலவர் மீனாட்சிசுந்தரம்பிள்ளை வரலாற்றை எழுதியதுபோல அழகரடிகள் தம் அருளாசிரியர் மறைமலையடிகளார் வரலாற்றை எழுததல் வேண்டும்'' என்று எனது வேண்டுகோளில் குறிப்பிட்டுள்ளபடி தவத்திரு அழகரடிகளுக்கு 8-8-75இல்,*

*"தாங்கள் செல்வி 6ஆம் சிலம்பில் 'பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை'யினை 12 கட்டுரைகளிலும், 7 ஆஞ் சிலம்பில் 'பொருளியல் வாழ்க்கை'யினை 12 கட்டுரைகளிலும் நாவலர் பண்டித வேங்கடசாமி நாட்டாரவர்கள் வியந்து போற்றும் வகையில் நிறைவுறச் செய்து எழுதினீர்கள். அதே போலத் தங்கள் ஆசிரியர் தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளார் வரலாற்றையும் செல்வி 50 ஆம் சிலம்பில் நிறைவுறும்படி பன்னிரு கட்டுரைகளாக எழுதியனுப்பின் மகிழ்வேன்'' என்று கடிதமெழுதி வேண்டினேன்.*

*அழகரடிகளும் அதற்கிசைந்து மகிழ்ச்சியூட்டி எழுதியனுப்பிய முதற்கட்டுரையே மேலேயுள்ளது. அது பொருட்பொலிவு மிக்கதாய் முத்தும் பவழமும் மணியும் கோத்தாற்போல் செந்தமிழ்ச் சொற்கள் அணிபெற எடுத்தாளப் பெற்றதாய், படிக்குந்தோறும் படிக்குந் தோறும் இன்பவூற்றெடுப்பதாய், வரலாற்றிலக்கியத்துக்கே எடுத்துக் காட்டாய் விளங்குவது கண்டு மகிழற்பாலதாகும்.*

*"யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்''*

வ. சு.

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

புல்[6] துளைத்தற் கருத்து வேர்ச்சொல் (தொடர்ச்சி)

புல்—புள்—பொள்—பள்—பள்ளம்

இக் காலத்தை நோக்க முற்காலம் பள்ளம் போன்றிருத்த லால், பள்ளக் கருத்தினின்று பழமைக் கருத்துத் தோன்றிற்று.

ஒ. நோ : கில்லுதல்=தோண்டுதல். கில்—கீள்—கீழ்=1. பள்ளம். (சூடா). 2. கீழிடம். "நள்ளுல் கீழுளு மேலுளும் யாவுளும்" (திருவாச. 5 : 46). 3. முற்காலம். "கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டு" (திருவாச. 40 : 9). கீழ்—கிழம் =முதுமை, முதியது.

தொல்லுதல்=துளைத்தல், தோண்டுதல். தொல்—தொள். தொள்ளுதல்—தொளைத்தல், தோண்டுதல், தொல்= பழைய. தொல்—தொல்லை=பழமை. தொல்—தொன்று= பழமை. தொன்று தொட்டு=பழைய காலந்தொடங்கி. தொல்—தொன்மை=பழமை, பழைமை. தொள்—தொண்டு =பழமை. (திவா.) "தொண்டுபோல வெவ்வுலகமுந்தோன்று தல் வேண்டும்" (விநாயகபு. 82 : 55)

பள்—பண்டு=1. பழமை. "பண்டாய நான்மறையும்" (திருவாச. 48 : 1). 2. முன்பு. "பண்டறியேன் கூற்றென் பதனை" (குறள். 1083).

ம., தெ. பண்டு. பண்டு—பண்டை=(பெ) 1. பழமை. "பண்டைப் பிறவிய ராகுவர்" (மணி. 11 : 33). 2. முற்காலம். "தண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே" (புறம். 10)— (கு பெ. எ.)=பண்டைக் காலம்.

பள்—பழம்—பழமை=1. தொன்மை. 2. தொன்மை யானது. "பரமர் பழமை யெனலாம்..............மயிலாடுதுறை" (தேவா. 496 : 5) 3. வழங்கா தொழிந்தது. (W). 4. சார மின்மை. 5. முதுமொழி (சூடா.) 6. பலநாட் பழக்கம். 7. நாட்பட்டதால் ஏற்படுஞ் சிதைவு. 8. பழங்கதை. 9. மரபு. (W.) 10. வழக்கம்.

பழ நடை=வழக்கம். "பழநடைசெய் மந்திர விதியிற் பூசனை" (திவ். பெரியதி. 2 : 3 : 4). பழங்கணக்கு=1. பழைய கணக்கு. 2. கடந்துபோன செய்தி.

பழங்கதை=1. பழைய கதை. 2. தெரிந்த செய்தி.

பழங்காசு=பண்டை நாளில் வழங்கிய காசு வகை.

பழங்கிடையன்=கட்டுக்கிடைப் பண்டம்.

பழஞ்சொல்=பழமொழி.

பழம்—பழன்—பழனம்=பண்டை நாளிலேயே பண்படுத் தப்பட்ட வயல். "பழன மஞ்ஞை யுகுத்த பீலி" (புறம். 13). 2. மருதநிலம். "பன்மலர்ப்பழனத்த" (கலித். 78). 3. பொய்கை. "பழனவாளைப் பரூஉக்கட் டுணியல்." (புறம். 61.)

பழமை—பழைமை=தொன்மையானதாய் அல்லது நாட் பட்டதாய் இருத்தல். க. பழவே.

பழை=பழங்கள். (பிங்.), கள்.

பழையன்=1. முன்னோன். 2. கிழவன். 3. மோகூர்த் தலைவன் பெயர். 4. போரூர்த் தலைவன் பெயர்.

பழையர்=1. முன்னோர். 2. கள் விற்போர். "பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்" (மலைபடு. 459).

பழையது=1. நீருற்றி வைத்த பழஞ்சோறு. 2. பழம் பொருள்.

ஒ. நோ: Gk. *palaios*, old, ancient, palaeocrystic, palaeography, palaeolithic, palaeontology, palaeothere, palaeozoic என்னுங் கூட்டுச் சொற்கள், palaios (பழைய) என்னுஞ் சொல்லை முதலுறுப்பாகக் கொண்டுள்ளன.

பழமை—வழமை=வழக்கம். நாட்டு வழமை (உ. வ.) வழ—வழப்பு—வழப்பம்=வழக்கம். (யாழ். அக.).

பள்—பய்—பயில். ஒ. நோ: அள்=கூர்மை. அள்— அய்—அயில்=கூர்மை.

பயில்தல் (பயிறல்)=1. பழகுதல். "பயிற்றொறும் பண் புடையாளர் தொடர்பு." (குறள். 783). 2. கற்றல். "படைக் கலம் யாவும்.......மாதவன் வயிற்பயில் வரதன்" (பாரத. வாரணு. 29). 3. தேர்ச்சியடைதல். 4. உலாவித் திரிதல். "நந்தி நந்தினி பயிலுகின்ற பேரொலி" (தணிகைப்பு. அகத். 103). 5. தங்குதல். "புலவர் பயிலுந் திருப்பனையூர்" (தேவா. 635:6). 6. பொருந்துதல். 7. நெருங்குதல். "பயிலிதழ் மலர்" (கலித். 103).

பயில்—பயில்வு=இருப்பு, வாழ்வு. "அடிமைக்கட் பயிலா தார் பயில்வென்னே" (தேவா. 1063 : 6).

பயில்—பயிற்சி=1. தொழில் பழகுதல். 2. ஆட் பழக்கம்.

பயில்—பயிற்றி=பழக்கம். "பழமையும் பயிற்றியும்...... உடையார்" (இறை. 2).

பழையது—பழைது=1. பழஞ்சோறு. 2. பழையது.

பழைது—பழைசு—பழசு=நாட்பட்டது. "தேன் அல்பழுமாய்ப் பழசுமாயிருக்கும்" (திவ். திருநெடுந். 26, வ்யா. 226).

பழஞ்சரக்கு=1. கட்டுக்கிடைப் பண்டம். 2. இன்று நுகரும் பழவினைப் பயன். "வறிதே தீயப் பழஞ்சரக்கும்" (மதுரைப். 49).

பழையான்=1. பழைமையானவன். "வானத்துயர் வானைப் பழையானை" (தேவா. 1064 : 9) 2. நெடுநாள் நண்பன். "பழையார்கட் பண்பிற் றலைப்பிரியா தார்" (குறள். 810).

பழையோள்=பழைமையான பாலைநிலத் தெய்வமாகிய காளி. "இழையணி சிறப்பிற் பழையோள் குழவி" (திருமுரு. 269.)

பழம்—பழவு—பழகு. பழகுதல்=1. நெடுங்காலமாக வழங்கி வருதல். "பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்" (தனிப்பா.) 2. பலநாட் பார்த்தல். பழகின முகம். (உ. வ.). 3. உறவாடுதல்.

> "நூறுண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
> நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள் ளாதே." (நறுந். 33)
>
> "ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை
> இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே." (ஷை 34)

4. விலங்கு பறவைகள் புதிய இடத்தில் அல்லது புதிய ஆட்களொடு பயின்று இணங்கிப்போதல். நாய் நன்றாய்ப் பழகிவிட்டது. எருமை ஏருக்குப் பழகிவிட்டது. (உ. வ.) 5. ஓர் உணவுப் பொருளைப் பலநாள் உண்டு பயிலுதல். "பழகப் பழகப் பாலும் புளிக்கும்." (பழ.) 6. ஒரு வினையைப் பலநாட் செய்து தேர்ச்சி பெறுதல். ஐந்தாண்டு வீணை பழகி வருகின்றான். ஆங்கிலம் பேசிப் பழகிக் கொண்டான். (உ. வ.) 7. ஒரு வினையை வழக்கமாகச் செய்தல். கல்லூரிக்குச் சென்ற பின் சுருட்டுக் குடிக்கப் பழகிவிட்டான். (உ. வ.) 8. ஒத்துப் போதல். குற்றாலஞ் சென்றபின் குளிர்ந்த நீர்க்குளிப்பிற்கு என் உடம்பு பழகிவிட்டது. (உ. வ.)

பழகு—பழக்கம்=1. பயிற்சி.

"சித்திரமுங் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம்—நித்தம்
நடையும் நடைப்பழக்கம்" (தனிப்பா.)

2. வழக்கம். "பழக்கங்கொடியது, பாறையினுங் கோழி கீறும்." (பழ. 3). அறிமுகம். அவர் எனக்கு நல்ல பழக்கம். (உ. வ.) 4. ஒழுக்கவினை, அவனிடத்திற் சில கெட்ட பழக்கங்கள் இருக்கின்றன. (உ. வ.) 5. வினைத் தேர்ச்சி, திறமை, சமர்த்து. (W). 6. அடங்கிப் போகை. 7. வயக்குதல், பயிற்றல். விலங்குகள் போருக்கும் வட்டக் காட்சிக்கும் (circus) பல்லாண்டு பழக்கம் பெறல் வேண்டும். (உ.வ.)

பழகாளி—பழகாடி = பட்டறிவுள்ளவன். (யாழ்ப்).

பழகு—பழக்கு. பழக்குதல் = பழகச் செய்தல், பயிற்றுதல், வயக்குதல்.

க. பழகிசு.

பழகு—பழங்கு. பழங்குதல் = 1 பழகுதல். 2. உறவாடுதல். 3. கையாளுதல். வீட்டிற் பழங்குவதற்கு வேண்டிய கலங்கள் இல்லை. (உ. வ.).

பழங்கு—புழங்கு. புழங்குதல் = 1. பழகுதல். 2. கையாளுதல். "விதர்ப்ப தேயத்திற் புழங்கலுறும் பொருண் முழுதும் பொலிந்து" (விநாயகபு. 55 : 4). புழங்கலுக்குரிய கலம் ஒன்றும் மருமகள் கொண்டுவரவில்லை. (உ. வ.).

பழக்கம்—புழக்கம் = 1. பழக்கம். 2. அறிமுகம்.

புழங்கு—புழக்கம் = 1. கையாட்சி. புழக்கத்திற்குக் கலங்களில்லை. 2. பண நடமாட்டம். இவ்வாண்டு பணப்புழக்கம் மிகக் குறைந்துவிட்டது. (உ. வ.).

பழங்கு—வழங்கு. வழங்குதல் = (செ. கு. வி.) 1. தொன்றுதொட்டு நடைபெற்று வருதல். "வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்" (தொல். குற்றி. 78). 2. பயிற்சி பெறுதல். (W.). 3. நிலைபெறுதல். "வானின் றுலகம் வழங்கி வருதலான்" (குறள். 11). 4. இயங்குதல். "வளிவழங்கும் மல்லன்மா ஞாலம் கரி" (குறள். 245). "முந்நீர் வழங்கும் நாவாய்" (புறம். 13). 5. உலாவுதல். "சிலம்பில் வழங்கலானுப் புலி" (கலித். 52) 6. நடமாடுதல். "பேய் மகள் வழங்கும் பெரும்பாழாகும்" (பதிற்றுப். 22 : 37). "வழங்காப் பொழுதுநீ கன்றுமேய்ப் பாய்போல்" (கலித். 112). 7. அசைந்தாடுதல். "மழகளிறு கந்து சேர்பு.........வழங்க" (புறம். 22). 8. ஏற்றதாதல். வாய்க்கு வழங்காத கறி. (W.).—(செ. குன்றுவி).

1. கையாளுதல். தமிழ்ப் புலவர் தனித்தமிழ்ச் சொற்களையே வழங்குதல் வேண்டும். (உ. வ.). 2. சொல்லுதல், "யானே தேறேன் அவர் பொய் வழங்கலரே" (குறுந். 21). 3. கொடுத்தல். "வழங்கத் தவாஅப் பெருவள னெய்தி" (பெரும்பாண். 26). 4. விடுத்தல். "சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்" (புறம். 14). 5. பகிர்ந்தளித்தல்.

க. பழகு (g).

வழங்கு—வழக்கு (பி. வி.). வழக்குதல்=போக்குதல். "வழக்குமாறு கொண்டு" (கலித். 101).

வழங்கு—வழக்கு (பெ.)=1. இயங்குகை. "வையை யன்ன வழக்குடை வாயில்" (மதுரைக். கருசு). "வழக்கொழியா வாயில்" (பு. வெ. 10, முல்லைப். 4). 2. உலக வழக்கு செய்யுள் வழக்கு என்னும் இருவகை வழக்கிடம். "வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே" (தொல். மர. 93). 2. உலக வழக்கு. "வழக்குஞ் செய்யுளுமாயிரு முதலின்" (பனம். சி. பா.). 3. இயல்பு வழக்கு தகுதி வழக்கு என்னும் இருவகைச் சொல் வழக்குகள்.

"இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகும் மூவகை யியல்பும்
இடக்க ரடக்கல் மங்கலம் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாரும் வழக்கியல்" (நன். 267).

4. பழக்கவொழுக்கம். "வாய்மையுடையார் வழக்கு" (திரிகடு. 37). 5. நெறி. "அன்புற்றமர்ந்த வழக்கென்ப" (குறள். 75). 6. நயன்மை (நீதி). "வழக்கன்று கண்டாய்" (திவ். இயற். 2 : 19). 7. சச்சரவு, உரிமைப் பிணக்கு. 8. சச்சரவு பற்றிய முறையீடு. "வழக்குரை காதை" (சிலப். 20). 9. கொடை. "உடையான் வழக்கினிது" (இனி. நாற். 3).

வழக்கு என்னும் சொற்கு, சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகர முதலியிற் குறிக்கப்பட்டுள்ள 7-ஆம் பொருள், "Litigation; நீதி ஸ்தலத்திற் செய்யும் வியாச்சியம். Mod" என்றுள்ளது. இஃது எங்ஙனம் இக் காலத்தது என்பது விளங்கவில்லை.

வழங்கு—வழக்கம்=1. பழக்கம். 2. நாள்தோறும் செய்வது. அவர் காலை எழுந்தவுடன் கடவுளை வணங்குவது வழக்கம். (உ. வ.). 3. ஈகை. "திருக்கை வழக்கம்" (கம்பன்). 4. படைக்கலத்தைக் கையாளுதல்.

க. பழகெ (b).

வழக்கு—வழக்கர்=(அரு. நி.) 1. நீள்வழி. 2. வழக்கம்.

வழக்கு —வழக்கன்=1. வழக்காளி. (W.). 2. இலவசமாகப் பகிர்ந்தளித்தற்குரிய பொருள். வழக்கனுயிருக்கிற சந்தனத்தைக் கொடுத்தான். (ஈடு, 4 : 3 : 1).

வழக்காறு=வழக்கு, வழக்கியல்.

வழக்காளி=1. வழக்குத் தொடுத்தவன். 2. போராடுபவன்.

வழக்காடுதல்=வழக்கிற் போராடுதல். வழக்காட்டு= போராட்டு

வழக்காடி=போராடி.

பழம் பொருள்கள் பொதுவாகப் பழுதுபடுமாதலால், பழமைக் கருத்தினின்று பழுதுக் கருத்தும் தோன்றும்.

பழமனை=இடிந்து பாழான வீடு. (யாழ். அக.).

பழ—பாழ். பாழ்த்தல்=1. அழிவடைதல். 2. பயனறுதல். "பாழ்த்த பிறப்பு" (திருவாச. 5 : 16). 3. சீர் குன்றுதல். "பாழ்த்த பாவிக் குடரிலே நெடுங்காலங் கிடந்தேற்கும்" (கம்பரா. குகப். 70). 4. இனிமை யின்மை. "பாழ்த்த குரலெடுத்துப் பாடினுள்" (தனிப்பா.).

பாழ்=1. அழிவு. நரகக்குழி பலவாயின பாழ்பட்டது. (சடகோபரந். 5). 2. கெடுதி. (W.). 3. வறட்பாழ், வெள்ளப் பாழ், குடிப்பாழ் என்னும் முப்பாழான இழப்பு. 4. இழிவு. (W.). 5. அழகின்மை. "நீறில்லா நெற்றிபாழ்" (நல்வழி, 24). 6. வீண். 7. வெறுமை. "வளமனை பாழாக வாரி" (பு. வெ. 3 : 15). 8. இன்மை. 9. ஒன்றுமில்லா இடம். 10. விளையா நிலம். "முதுபாழ்ப் பெயல்பெய் தன்ன" (புறம். 381). 11. புறம் போக்கு நிலம். 12. குற்றம். "முப்பாழ் கழிந்து" (காசிக். வயிர. 25). 13. வானம். 14. மூலமுதனிலை (மூலப் பிரகிருதி). "முடிவில் பெரும் பாழேயோ" (திவ். திருவாய். 10 : 10 : 10). 15. ஆதன் (புருடன்). "பாழெனக் காலெனப் பாகென வொன்றென" (பரிபா. 3 : 77).

நத்தப்பாழ்=பாழூர்.

முப்பாழ்=1. மூவகை இழப்பு. 2. உடம்பிற்குள் வெறிதான மூவிடம். 3. முப்பொருளின்மை. "முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்"

பாழ்க்கோட்டம்=சுடுகாடு. "பொடியுடுத்த பாழ்க்கோட்டஞ் சோரமுன்" (பதினெ. ஐயடி. க்ஷேத். 2.)

பாழ்கிடை = விடாமற் பற்றிக்கிடக்கை. "கடன்காரன் பாழ்கிடையாய்க் கிடக்கிருன்" (உ. வ.)

பாழ்ங்கிணறு = தூர்ந்து அல்லது இடிந்து பயனற்ற கிணறு.

பாழ்ங்குடி = சீர் கெட்ட குடும்பம்.

பாழ்மூலே = எளிதிற் செல்ல முடியாது தொலேவான இடம். அவன் எங்கேயோ பாழ்மூலேயில் இருக்கிருன். (உ. வ.)

பாழ்வாய் கூறுதல் = நன்றி மறந்து முணுமுணுத்தல்.

பாழ்வாயன் = நன்றி மறந்து குறை கூறி.

பாழ்—பாழி = 1. வெறுமை. 2. வானம் (ஆகாயம்). (யாழ். அக.)

பாழி—பாழிமை = வெறுமை. "பாழிமையான கனவில். (திவ். பெரியதி. 11 : 2 : 6.)

பாழூர் = குடி நீங்கிய ஊர். "பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே" (புறம். 132.)

பாழுக்கிறைத்தல் = 1. பாழ் நிலத்திற்குத் தண்ணீர் பாய்ச்சுதல். "இரவு பகல் பாழுக்கிறைப்ப" (குமர. பிர. நீதி நெறி. 90). 2. வீணன வினே செய்தல். "பாழ்க்கிறைத்துக் கழித்தீர்" (அருட்பா, vi, உறுதி கூறல், 2).

பாழ்—பழுது = 1. சிதைவு. "இவை பழுதிலே" (தேவா. 543 : 2). 2. பதனழிந்தது. 3. பிணமாயிருக்குந் தன்மை. (சிலப். 19 : 66, அரும்.) 4. தீங்கு "பழுதெண்ணும் மந்திரியின்" (குறள். 639.) 5. குற்றம். "பழுதிரேல் புகழாள் பங்க" (திருவாச. 28 : 10). 6. பயனின்மை. "பழுது பயமின்றே" (தொல். உரி. 26). 7. பொய். "பழுதுரை யாதவன் உரைப் பான்" (திருவாலவா. 19 : 9) 8. வறுமை. "பழுதின்று" (பொருந. 150). 9. உடம்பு. "பழுதொழிந் தெழுந்திருந் தான்" (சிலப். 19 : 66) 10. ஒழுக்கக்கேடு. 11. வெற்றிடம்.

பழுது—வழுது = பொய். (பிங்.)

பழங்கண் = 1. துன்பம். "பகைவராரப் பழங்கண்ணருளி" (பதிற்றுப். 37 : 3). 2. மெலிவு. (பிங்.) முதுமையில் துன்பமும் மெலிவும் நேர்வது இயல்பே.

ஒருவரைப் பழிப்பது தாழ்வு படுத்துதலாதலால், தாழ் மட்டத்தைக் குறிக்கும் பள்ளக் கருத்தினின்று பழிப்பு அல்லது இழிப்புக் கருத்துந் தோன்றும்.

பள்—பழி. பழித்தல்=1. இகழ்ந்து அல்லது இழித்துக் கூறுதல். 2. கடிந்து கூறுதல். "உலகம் பழித்த தொழித்து விடின்" (குறள். 290.) 3. புறங்கூறுதல், 4. நகையாடுதல்

பழித்துக் காட்டுதல்=ஒருவரது உறுப்பை அல்லது செயலைப்போல் நடித்து நகையாடுதல்.

க பழி.

பழி=1. இகழ்ச்சி. "புகழிற் பழியி னென்று" (தொல். சொல். 73). 2. அலர். "ஒன்றூர் கூறும் உறுபழி நாணி" (பு. வெ. 11, பெண்பாற். 4). 3. குறை. (W) 4. குற்றம். "மொழிபல பெருகிய பழிதீர் தேஎத்து" (பட்டினப். 216). 5. தீவினை (பாவம்). "தசமாமுகன் பூவியலும் முடிபொன்றுவித்த பழிபோயற" (தேவா. 890 : 2). 6. தீவினைப் பயன். அவனைக் கொலைப்பழி விடாது. (உ. வ.) 7. தீங்கிற்குத் தீங்கு செய்வு. 8. கொலை. வெட்டுப்பழி குத்துப்பழி (உ. வ.) 9. பகை. இருவகுப்பார்க்கும் பழிமூண்டு விட்டது. (உ. வ.) க. பழி.

பழிகரப் பங்கதம்=வசையை வெளிப்படையாகக் கூறாது, குறிப்பாக அல்லது மறைத்துக் கூறும் செய்யுள். "மொழி கரந்து சொல்லினது பழிகரப்பாகும்." (தொல். செய். 125),

பழிகாரன்=1. பிறர்மேற் குறைகூறுபவன். (W) 2. கொலைகாரன்.

பழி சுமத்தல்=1. கரணியமின்றிக் குற்றவாளிப் பெயர் தாங்கல். "தேரையர் தெங்கிளநீ ருண்ணப் பழிசுமப்பர்" (தமிழ் நா. 74). 2. தன் வினையால் அல்லது பிறர் வினையால் குற்றந் தாங்குதல்.

பழி சுமத்துதல்=குற்றஞ் செய்யாதவனைக் குற்றவாளி யெனல்.

பழிதீர்த்தல்=1. கொலைக்குக் கொலை செய்தல். 2. தீவினையைப் போக்குதல். "இந்திரன் பழிதீர்த்த படலம்" (திருவிளை.)

பழிமொழி=1. இழித்துரை. 2 குற்றச்சாட்டு. 3. புறங் கூற்று. 4. வசையுரை.

பழிவிழுதல்=1. கொலை நேர்தல். 2. கொலைக் குற்றம் நேர்தல்.

பழி வாங்குதல்=கொலைக்குக் கொலை அல்லது உறுப் பறைக்கு உறுப்பறை நிகழ்த்துதல்.

பழி—பழிப்பு=1. இழிப்பு. "பெறுவது பழிப்பால்" (கம்பரா. படைக் காட்சி. 50) 2. வசவு. 3. நகையாட்டு.

4. குறளை 5. குற்றம். 6. குறை. ''பன்னிரு படலம் பழிப் பின் றுணர்ந்தோர்'' (பு. வெ. சிறப்புப்.)

க. பழிவு.

பழி—பழிசை = இகழ்ச்சி (இலக். அக.)

பள்—பண்டு = பழிமொழி.

தெ. பண்டு (b)

பண்டு—பண்டை = 1. இடக்கர் மொழி. 2. வசை மொழி. பண்டை பண்டையாய்த் திட்டுகிருன். (உ. வ.)

தெ. பண்ட (b)

பண்டு—வண்டு = குற்றம். (பிங்.)

பண்டை—வண்டை = கொச்சை மொழி. வண்டைப் பேச்சு. வண்டை வண்டையாய்ப் பேசுகிருன். (உ. வ.)

வண்டு—வடு = 1. ''பழி வடுவன்று வேந்தன் ரெழில்'' (குறள். 549). 2. குற்றம். ''வடுவில் வாய்வாள்'' (சிறுபாண். 121).

இனி, பழமை முதிர்ச்சியாதலால், பழமைக் கருத்தினின்று முதிர்ச்சிக் கருத்துந் தோன்றும்.

ஒ. நோ : முதுமை = பழமை. முது—முதிர். முதிர்தல் = 1. முற்றுதல், 2. தக்க பருவமடைதல்.

பள்—பழு. பழுத்தல் = 1. காய் முதிர்ந்து பழமாதல். ''பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்ருல்'' (குறள். 216). 2. மனங் கனிதல். ''பழுத்த மனத்தடியர்'' (திருவாச 24 : 4). 3. நுகர்ச்சிக்குத் தகுந்த பருவமடைதல். (W). 4. தேர்ச்சியடைதல். ''செந்நாச் சொற் பழுத்தவர்க்கும்'' (சீவக. 435). 5. வினை வெற்றியாய் முடிதல். எடுத்த கருமம் (காரியம்) பழுத்து விட்டது. (உ. வ.) 6. குழைதல். ''விற்பழுத்து'' (சீவக. 435). 7. செழித்தல். ''பல்கிய கிளைஞரும் பழுக்க வாழுநர்'' (பிரமோத். 6 : 47). 8. சிரங்கு சிலந்தி முதலியன முற்றி மென்மையாதல். சிலந்தி பழுத்து விட்டது. கட்டி பழுத்து உடைந்து விட்டது. (உ. வ.) 9. பழுப்பு நிறமாதல். பழுக்கக் காய்ச்சிய இரும்பு. (உ. வ) 10. பருத்தல், பிள்ளை பெற்ற வயிறு காரவுணவு உண்ணுமையாற் பருத்துப் போதல். வயிறு பழுத்துவிட்டது. (உ. வ.) 11. மிகுதல். ''தொளிபழுத்த தண்பணை'' (காசிக. துருவ. 11). 12. முதிர்தல். ''மற்பழுத்தகன்ற மார்பத்து'' (சீவக. 435.) 13. மூப்படைதல். பழுத்த கிழம். (உ. வ.)

பழு—பழம் = 1. கனி. ''காயே பழமே'' (தொல். மர. 89). 2. முதிர்ந்த காய், தென்னை நெற்று. ''நாய்பெற்ற தெங்கம்

பழம்'' (பழமொழி). 3. முதிர்ந்த காய்போன்ற முள். ''மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம்'' (குறள். 1120). 4. அகவை முதிர்ந் தோ-ன்-ள். இன்று சுடுகாட்டிற்குப் போகிறது பழுத்த பழம். (உ. வ.) 5 வினையின் வெற்றி, போன கருமம் (காரியம்) காயா பழமா? (உ. வ.). 6. சிறுவர் விளையாட்டு வெற்றி. இன்று நான் மூன்று பழம் எடுத்தேன். (உ. வ.). 7. முக்கால் (குழூஉக்குறி). ஆறுதற்பழம், இணங்கற் பழம்.

பழம்—வ. பல (ph).

பழு—பழுப்பு=1. பொன்னிறம். 2. முதிர்ந்து மஞ்சள் நிறமடைந்த இலை. பழுப்பெல்லாம் நீக்கி விடு. (உ. வ.). 3. பூங்காவி நிறம். துவை வேட்டி பழுப்பேறி விட்டது. (உ. வ.). 4. உதட்டுச் சிவப்பு. ''அதரத்திற் பழுப்புத் தோற்ற'' (ஈடு, 5 : 3 : 3). 5. அரிதாரம். ''பந்தியாப் பழுப்பு நாறில்' (சீவக. 1287). 6 சீழ். புண்ணிலுள்ள பழுப்பை யெடுத்துவிட வேண்டும். (உ. வ.).

பழுக்க=முற்றவும், முழுதும். ''சாஸ்திரார்த்தங்களையும் பழுக்க ஓதி'' (குருபரம். 186).

பழு—பழுநு. பழுநுதல்=1. கனிதல். 2. முதிர்தல். வண்டுபடப் பழுநிய தேனார் தோற்றத்துப் பூவும்'' (மதுரைக். 475). 2. நிறைவுறுதல். ''வளம் பழுநி'' (மலைபடு. 578).

பழுநு—பழுனு. பழுனுதல்=முதிர்தல். ''தீந்தொடை பழுனிய'' (பதிற்றுப். 8 : 21).

பழுக்காவி=1. மஞ்சள் கலந்த செந்நிறம். 2. மஞ்சணை.

பழம்—பயம்=1. பயன். பயங்கெழு மாநிலம். (புறம். 58). 2. வினைப்பயன். 3. இனிமை. ''சீரமை பாடற்பயத் தாற் கிளர் செவி'' (பரிபா. 11 : 69.) 4. அரசிறை. ''பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்'' (சிலப். 2 : 2). 5. தன்மை. ''அங்கையு ணெல்லி யதன்பயமாதலால்'' (பு. வெ. 2 : 13).

ஒ. நோ. ௩. பழம்—வ. பல—௩. பலன். E. fruit=result.

பயம்—பயன்=1. விளைவு. ''வேள்விப் பயன்'' (குறள். 87). 2. பழம். ''பயனுகு நல்லாண் பனைக்கு'' (சிவப். பிரபந். நால்வர். 17). 3. சாறு ''வம்பார் கொழுங்கனிச் செழும்பயன் கொண்டு'' (தேவா 460 : 3). 4. சொற்பொருள். ''சொற்குப் பயன்றேர்ந்துவா'' (குமர. பிர. மதுரைக். 53) 5. செல்வம். ''பயன்றூக்கி'' (குறள். 912).

பயம்—பய. பயத்தல்=(செ. கு. வி.) 1. விளைதல். ''பயவாக் களரனையர் கல்லா தவர்'' (குறள். 406). 2. உண்டா தல். (திவா). 3. நிகழ்தல். ''நல்வினை பயந்ததென்னு'' (கம்பரா. கார்முக. 36). 4. கிடைத்தல். (சூடா).—(செ.

குன்று. வி.) 1. கொடுத்தல். "இன்னருள் பயந்து" (தேவா. 775 : 4). 2. படைத்தல். "தேவதேவன் செழும் பொழில்கள் பயந்து காத்தழிக்கும்" (திருவாச. 5 : 30). 3. பெறுதல். "பராவரும் புதல்வரைப் பயக்க" (கம்பரா. மந்தரை. 47). 4. பூத்தல். "தாமரை பயந்த வொண்கேழ் நூற்றித ழலரின்" (புறம். 27). 5. இயற்றுதல். "சிங்கடி தந்தை பயந்த........ தமிழ்" (தேவா. 201 : 12).

பய—பயப்பு=1. பயன். "பயப்பே பயனும்." (தொல். உரி. 9). 2. அருள். (W)

பள்—பண்டு=பழம். (தெ.) க. பண்.

பண்டு (பழம்) என்னும் சொல் இற்றைத் தமிழில் வழங்கா விடினும், குமரி நாட்டுத் தமிழில் வழங்கியிருத்தல் வேண்டும். பள் என்னும் மூலத்தினின்று பண்டு என்னும் சொல்லே முதலில் தோன்றியிருக்கும். ழகர வுயிர்மெய் ணகர வுயிர்மெய் யாகத் திரியினும் ழகரமெய் தனிக்குறிலடுத்து வழங்காமையின் பிறவெழுத்தாய்த் திரிவதில்லை. பழமை, பழி என்னும் சொற்கள் பண்டு என்னும் வடிவுங் கொண்டு வழங்குவது போன்றே, பழம் என்னும் சொல்லும் அவ் வடிவுகொண்டு வழங்கியிருத்தல் இயல்பே.

குமரிநாட்டு இலக்கியமனைத்தும் அழிக்கப்பட்டு விட்டமை யால், பல சொற்கட்கும் சொல்வடிவுகட்கும் மேற்கோள் எடுத்துக்காட்ட இயலவில்லை.

குமரிநாட்டுச் சொற்கள் சில இற்றைத் தமிழில் வழங்காது ஏனைத் திரவிட மொழிகளில் வழங்குவதனால், அவை தமிழிற் குரிய வல்ல என மயங்கற்க.

———

## சேலம் கொல்லி மலையில் வல்வில் ஓரி விழா

6-9-75இல் சேலம் கொல்லி மலையில் நடைபெற்ற வல்வில் ஓரி விழாவில் சிறப்புரை ஆற்றிய மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள், "உலகத்து விஞ்ஞானப் புதுமைகளை யெல்லாம் தமிழில் படித்து, தமிழில் சிந்தித்து, தமிழில் செயல்படவேண்டும்" என்று கூறினார்.

பெரும்பான்மையான தமிழ் இலக்கண இலக்கியங்களை யெல்லாம் உரை எழுதி வெளியிட்டுள்ள சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் மேலே குறிப்பிட்ட குறிக்கோளைக்கொண்டு அறிவியல் (விஞ்ஞான) நூல்கள் சிலவும் வெளியிட்டுள்ளது. மேலும், தொடர்பாகத் தக்க பேரறிஞர்களைக் கொண்டு அறிவியல் நூல்களை வெளியிடவும் முயன்று வருகின்றது. இத்தகைய புது நூல்களை அச்சிடுவதற்கும், அவை விரைந்து விலைப்படுவதற்கும் அதனால் அவற்றை எழுதிய ஆசிரியர்கள் தகுந்த ஊதியம் பெறுவதற்குமுரிய உதவிகளைச் செய்யத் தமிழக வரசும் செல்வர்களும் முன் வருதல்வேண்டும்.

விழாவுக்கு வீட்டுவசதி வாரிய அமைச்சர் மாண்புமிகு க. இராசாராம் அவர்கள் தலைமை தாங்கினர். தவத்திரு குன்றக்குடி அடிகளார் உரையாற்றினர்.

# அகநானூற்றில் கோடிக்கரை

[பி. எல். சாமி, பி. எஸ்ஸி.]

சங்க நூல்களில் பல ஊர்களைப்பற்றிய செய்திகளைப் புலவர்கள் கூறியுள்ளனர். சில ஊர்களைப்பற்றி ஓரிரு குறிப்பு களைத் தவிர வேறு காண முடிவதில்லை. கோடிக்கரையைப் பற்றிச் சங்கநூல்களில் அகநானூற்றில் ஒரே ஒரு செய்தி வருகின்றது. அகநானூறு 70ஆம் பாடலில் 'தொன்முது கோடி' என்று கோடிக்கரை அழைக்கப்படுகின்றது. இது பாண்டியர்க்கு உரியதாகக் கூறப்பட்டுள்ளது. இங்கு இராமன் ஓசையிட்டுக் கொண்டிருந்த பறவைகளின் ஒலியை நிறுத்தினான் என்று கூறப்பட்டுள்ளது.

"கொடுந்திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென
விரும்புலாக் கமழுஞ் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங்க ணவ்வலைப் பயம்பா ராட்டிக்
கொழுங்க ணயிலை பகுக்குந் துறைவ
எம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே
யலர்வாய்ப் பெண்டி ரம்ப றூற்றப்
பலருமாங் கறிந்தனர் மன்னே யினியே
வதுவை கூடிய பின்றைப் புதுவது
பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்குங்
கானலம் பெருந்துறைக் கழனி மாநீர்ப்
பாசடைக் கலித்த கணைக்கா னெய்தல்
விழவணி மகளிர் தழையணிக் கூட்டும்
வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிரும் பௌவ மிரங்கு முன்றுறை
வெல்போ ரிராம னருமறைக் கவித்த
பல்வீ ழாலம் போல
யொலியவிந் தன்றிவ் வழுங்க லூரே." —அகம், 70.

இந்தப் பாட்டில் முதலில் பரதவருடைய தொழில்பற்றி ஒரு செய்தி கூறப்பட்டுள்ளது. பரதவருடைய 'சிறுகுடிப்பாக்கம்' கூறப்பட்டுள்ளது. குறவர் முதலிய பழங்குடி மக்கள் வாழ்ந்த சிறிய ஊர்களைச் சிறுகுடி என்றழைப்பது வழக்கமென்று தெரி கின்றது. வேட்டுவரைச் 'சிறுகுடியினரே' என்று சிலப்பதி காரத்தில் அழைத்திருப்பதைக் காணலாம்.

கோடிக்கரையில் பறவைகள் நிறைய இருந்தனவாக அக நானூறு கூறும் செய்தி மிகவும் சிறப்பானதாகும். கோடிக் கரையில் பறவைகள் நிறைய இருந்து கத்தினமையால் இராமன் பறவைகளைக் கத்தாமல் அவித்தான் என்று அகநானூறு கூறுகின்றது. பறவைகள் மிகுதியாகக் கூடிச் செய்யும் ஒலியைத் துழனி என்று சங்கநூல்கள் கூறும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் கோடிக்கரையில் பறவைகள் மிகுதியாக இருந்தமைபற்றி அகநானூறு கூறிய

செய்தி இன்றும் உண்மையாகவே இருப்பது மிகவும் வியப்பான தாகும். இன்றும் தமிழ்நாட்டில் பறவைகளை மிகுதியாகக் காணவேண்டுமாயின் வேடந்தாங்கல் போக வேண்டும். அல்லது கோடிக்கரை போகவேண்டும். வேடந்தாங்கலில் காண் பதைவிடக் கோடிக்கரையில் பலவகைப் பறவை இனங்களைக் காணலாம். இதன் காரணமாகவே கோடிக்கரையைப் பறவைகள் புகலிடமாகத் (Bird Sanctuary) தமிழக அரசு நிறுவி உள்ளது. இங்கு வரும் வெளிநாட்டுப் பறவைகளைப் பற்றி, பம்பாய் இயற்கை வரலாற்றுக் கழகத்தார் பல ஆண்டுகளாக ஆராய்ச்சி செய்து வருகின்றனர். இருநூறுக்கும் மேற்பட்ட பறவை இனங்களை இந்தக் கழகத்தார் கோடிக்கரையில் கண்டுள்ளனர். இந்தக் கழக ஆராய்ச்சியாளருடன் சில நாட்கள் நான் பறவைகளை ஆராய்ந்ததுண்டு. இங்கு வரும் சில பறவைகள் சைபீரியா முதலிய மிகமிகத் தொலைவான நாடுகளிலிருந்தும் வருகின்றன. பறவைகளின் காலில் காணப்பட்ட எழுத்துப் பொறித்த வளையங்கள் கோடிக்கரையில் மீட்கப்பட்டுள்ளன. கோடிக்கரையில் போடப்பட்ட வளையங்கள் ஐரோப்பாவிலும் சைபீரியாவிலும் அகப்பட்டுள்ளன. அகநானூறு கூறும் செய்தியிலிருந்து சங்ககாலத்திலும் கோடிக்கரையில் பல இனப் பறவைகள் இருந்தன என்பது தெளிவாகின்றது. வேடந் தாங்கலில் இருக்கும் பறவைகள் புகலிடம் இருநூறு ஆண்டுகள் வரலாற்றை உடையது. ஆனால், கோடிக்கரையில் உள்ள பறவைகள் புகலிடம் இரண்டாயிரம் ஆண்டு வரலாற்றுச் சிறப் புடையது என்பதை அகநானூற்றில் இருந்து தெரிந்து கொள்ளலாம்.

இந்த அகநானூற்றுப் பாடலில் கூறிய இன்னொரு செய்தி இராமனைப்பற்றியதாகும். சங்க இலக்கியத்தில் முற் பட்ட நூல்களில் இராமனைப்பற்றியோ கண்ணனைப்பற்றியோ வரும் செய்திகள் மிகவும் குறைவு. ஒரே ஓர் அகநானூற்றுப் பாடலில் 'மால்' என்று கண்ணன் அழைக்கப்படுகின்றான். கண்ணன் கோபிகைகளுடன் நடத்திய விளையாட்டு இந்தப் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இராமனைப்பற்றி அகநானூறு 70 ஆம் பாடலே குறிப்பிட்டுள்ளது. இராமனும் அவனுடைய பரிவாரமும் கோடிக்கரையில் மந்திரம் சொல்லுதல் காரணமாக ஆலமரத்தில் புட்கள் கத்தாமல் அவன் அவித்தான் என்று அகநானூறு கூறியுள்ளது. இராமனையும் கோடிக்கரையையும் தொடர்பு படுத்தும் பரம்பரைச் செய்தி இன்றும் கோடிக் கரையில் வழங்குகின்றது. இராமன் கோடிக்கரையில் ஒரு பாறையில் ஏறி இலங்கையைப் பார்த்ததாகவும், இராமனின் பாதம் ஒரு பாறையில் படிந்ததாகவும் கோடிக்கரைக் காட்டில்

காட்டுவர். இராமபாதம் என்று இந்த இடம் இன்று அழைக்கப் படுகின்றது. பாறையில் பாதச்சுவடு தெரிகின்றது. ஆனால், மனிதனின் பாதச்சுவட்டைவிட மிகப் பெரிதாக உள்ளது. 'வெல்போர் இராமன்' என்று அகநானூறு கூறுவதால் இராமனுடைய தெய்வத்தன்மைபற்றிய கருத்து சங்ககாலத்தில் வழங்கவில்லை என்று தெரிகின்றது. இராமன் தெய்வமானது சங்ககாலத்துக்குப் பிற்பட்டதே. இராமனைச் சத்திரியனாகவே அகநானூறு கூறியுள்ளது. இராமன் பறவைகளின் ஒலியை அவித்தது ஒரு பெரும் சத்திரியனின் தன்மை யென்பதை வடநூல் மரபுவழி அறியலாம். இலலித வித்தாரம், மகாவத்து முதலிய பௌத்த நூல்களில் புத்தர் மரத்தடியில் தங்கினதும் மரத்தின் நிழல் மறையாமல் நிலைத்து நின்றதாகக் கூறப் பட்டுள்ளது. வடமொழியில் உள்ள பழைய நூல்களில் இத்தகைய செயல் மகாபுருஷனின் இலக்கணமாகும் என்று கூறப்பட்டுள்ளது. இராமன் காட்டில் சென்றுகொண்டிருந்த போது இராமனின் சிறப்பால் மரங்களின் நிழல்கள் அசையாது நின்றன என்று காளிதாசன் கூறியுள்ளான். காளிதாசனுக்கு முந்தியதொரு செவிவழிச் செய்தியையே அகநானூறு கூறுவ தாகக் கருத வேண்டும். ஆலமரத்திலிருந்த பறவைகளின் ஓசையை இராமன் அவித்ததாகக் கூறியதும் காளிதாசன் கூறியதுபோன்றதொரு செய்தியாகும். இதுவும் இராமன் ஏழு மராமரங்களை ஒரே அம்பால் துளைத்தது போன்றதொரு வீரச் செயலேயாகும். இத்தகைய வீரச் செயல்களையே பிற்காலத்தில் தமிழிலக்கியத்தில் 'விளையாட்டு' என்றழைத்தனர். பௌத்தர் களின் நூல்களில் கால் கட்டைவிரலால் பெரும் பாரத்தைத் தூக்கி எறிவது போன்ற வீரச் செயல்கள் மகாபுருஷனின் செயல்களாகக் கூறப்பட்டுள்ளன. 'விளையாட்டு ஐங்கலம் நெல் சுமப்பது சாத்தற் கெளிதென்றாற் போலக் கொள்க' என்று சிவஞான முனிவர் எழுதினதைக் கவனிக்க வேண்டும். சிவபெருமான் நிகழ்த்திய அருஞ்செயல்களையே திருவிளையாடல் என்று புராணங்கள் கூறும். இத்தகையதோர் அருஞ்செயலே இராமன் பறவைகளின் ஒலியை அவித்ததாகும்.

இராமன் கோடிக் கரையில் மந்திராலோசனை செய்ததா கவும் கூறுவர். தொன்முது கோடியைத் திருவணைக்கரை என்றும் கூறுவர். இராமன் கோடிக்கரையில் இருந்ததால் இலங்கையை அடைய, கடலைக் கடக்க மந்திராலோசனை செய் தான் என்று கொள்ள வேண்டும். அண்மையில் வால்மீகி இராமாயணத்தை வரலாற்றுக்கண் கொண்டு ஆராய்ந்த சங்காலியா (Sankalia) என்ற வரலாற்றுப் பேராசிரியர் இராமா

யணம் தென்னாட்டில் நிகழவேயில்லை என்பதற்குப் பல ஆணித் தரமான சான்றுகள் கூறி நிறுவியுள்ளார். இலங்கை என்பது மத்திய இந்தியாவில் வழங்கும் லங்கா என்ற பெருநீர்ப்பரப்பின் பெயராகும் என்று காட்டியுள்ளார். ஜபல்பூர் அருகே இலங்கை இருந்திருக்க வேண்டுமென்று காட்டியுள்ளார். இராவணன் மத்திய இந்தியப் பழங்குடி மக்களின் தலைவனாக இருக்க வேண்டும் என்பதையும் கூறியுள்ளார். வரலாற்றுத் துறையில் பெரும் அறிஞராகக் கருதப்படும் பேராசிரியர் சங்காலியாவின் கருத்து மிகவும் பொருத்தமானதே யாகும். இராவணன் இலங்கையைச் சேர்ந்தவன், தென்னாட்டுத் தமிழன் என்ற கருத்து பிற்காலத்ததாகும். மகாபாரதம் போன்று இராமாயணம் வரலாற்றுத்தன்மை வாய்ந்ததன்று என்பதை இன்று அறிஞர்கள் பலரும் ஒப்புக்கொள்கின்றனர். ஆதலின் இராமாயணத்தில் உண்மை வரலாறு காண முயல்வது வீணாகும். பேராசிரியர் சங்காலியா அவர்கள் வால்மீகி இராமாயணம் காளிதாசனுக்குப் பிறகு கி. பி. நான்காம் நூற்றாண்டுக்குப் பின்னால் எழுத்துவடிவாக்கப்பட்டதாகக் கருதலாம் என்று கூறியுள்ளார். கி. பி. நான்காம் நூற்றாண்டுக்கு முன் இராமனையும் இலங்கைத் தீவையும் தொடர்புபடுத்திய கதை வழங்கவில்லை என்று வடமொழித் தொடர்பான நூல்களை ஆராய்ந்து அவர் நிறுவியுள்ளார். ஆனால், இந்தக் கருத்து சரியானதன்று என்பதற்குத் தமிழிலக்கியத்தில் சான்று உள்ளது. கி. பி. நான்காம் நூற்றாண்டுக்கு முன்னரே கி. பி. முதல், இரண்டு நூற்றாண்டுகளில் தோன்றிய அகநானூறு இராமன் கோடிக்கரையில் வந்து இருந்ததாகக் கூறுகின்றது. இராமன் கோடிக்கரையில் இருந்ததாகக் கூறினதால் இராமன் இலங்கைத்தீவு செல்ல ஆயத்தம் செய்தான் என்பது தெரிந்ததாகும். ஆதலின் இராமனை இலங்கைத்தீவுடன் தொடர்புபடுத்திய செய்தி சங்க காலத்திலே வழங்கினதாகும் என்பது தெளிவாகும். பேராசிரியர் சங்காலியா அவர்கள் கூறுவது போலன்றிக் கி. பி. முதல் நூற்றாண்டிலேயே இராமனை இலங்கைத் தீவுடன் தொடர்புபடுத்தும் கதை தென்னாட்டில் பரவியிருந்தது என்பது தெளிவாகும். பேராசிரியர் சங்காலியா அவர்களுக்குச் சங்கநூல் செய்தி தெரியாமையால் இவ்வாறு எழுதினர். புறநானூற்றிலும் (378) இராமனைப் பற்றிய செய்தி ஒன்று வருகின்றது. ஆனால், அதில் இராமனை இலங்கைத் தீவுடன் தொடர்பு படுத்திய செய்தியைக் காணோம். இராமனை இலங்கையோடு தொடர்பு படுத்திய கதை கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் தமிழகத்தில் வழங்கியிருப்பினும் இராமனைத் தெய்வமாகக் கருதவில்லை என்பது தெரி

கின்றது. இராமனைப் பெரிய வீரனாகவே கருதினர். சிலப்பதிகாரத்தில் 'அருந்திறல்' என்றே இராமன் பெயர் கூறப்பட்டுள்ளது. சேனாவரையர் விறல் என்ற சொல்லிற்கு எடுத்துக்காட்டாக இந்த அருந்திறல் என்ற பெயரைக் காட்டியுள்ளார். பெருவிறல், அருந்திறல் என்னும் தொடக்கத்தன என்று கூறியுள்ளார். ஆதலின் இராமனை அருந்திறலையுடைய வீரன் என்றே சங்ககாலத்தில் கருதினர் என்பது தெளிவாகும். இராமனை விஷ்ணுவுடன் ஒன்றுபடுத்தித் தெய்வமாகவே கருதினது கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இராமாயண கதை கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் எழுந்தது என்றும் முடிவாக எழுதப்பட்டது கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில்தான் என்றும் அறிஞர்கள் பலர் கருதுகின்றனர். ஆதலின் கி. பி. முதல், இரண்டாம் நூற்றாண்டுகளுக்குள் தோன்றின அகநானூற்றில் கூறப்பட்ட இராமன் தெய்வமாகக் கூறப்படவில்லை. வீரனாகவே கூறப்பட்டுள்ளான்.

கோடிக்கரையைக் கிரேக்க நூலாசிரியரான டாலமி 'நிகம' என்று குறிப்பிட்டுள்ளார் என்று கூறுவர். நிகமம் என்ற சொல் வேதத்தையும் குறிக்கும். டாலமியின் காலம் முதல் நூற்றாண்டு ஆனதால் நிகம என்று குறிக்கப்படும் வேதாரண்யத்தை முதல் நூற்றாண்டிலேயே கிரேக்கர்கள் தெரிந்திருந்தனர் என்பது தெளிவாகும். கிரேக்கரின் செய்திக்கேற்ப அகநானூறும் தொன்முது கோடியைக் கூறியிருப்பதைக் காணலாம். வேதாரண்யத்தைத் திருமறைக்காடு என்று தேவாரம் அழைக்கின்றது. திருமறைக்காடு என்ற பெயர் அகநானூற்றில் 'அருமறைக்கு' புட்களை ஒலியவித்த செய்தியால் வழங்கிப் பின்னர் வேதாரண்யம் என்று வடமொழியில் அழைக்கப்பட்டிருக்கலாம். நிகமம் என்ற சொல் வணிகத்தில் சிறந்த ஊரையும் குறிக்கும். சங்க காலத்திலேயே நிகமம் என்ற ஊர்ப் பெயர்கள் வழங்கிவந்துள்ளன. நொச்சிநியமங்கிழார் என்ற புலவர் நொச்சிநியமம் என்ற ஊரில் வாழ்ந்தவர். நியமமூதூர் என்பது அகநானூற்றில் (83) கூறப்பட்டுள்ளது, நியமம் என்பதற்கு அங்காடி என்று பொருள் சொல்லப்பட்டுள்ளது. ஆதலின் சங்ககாலத்திலேயே கோடிக்கரையும் அதன் அருகிலிருந்த வேதாரண்யமும் கிரேக்கர் வணிகம் செய்த அங்காடி நிறைந்த ஊராக இருந்திருக்க வேண்டும். ஆதலின் நியமம், நிகமம் என்று அழைக்கப்பட்டிருக்கலாம். தொன்முது கோடி சங்ககாலத்திலேயே கிரேக்க வணிகர்கள் அறிந்த ஊராய் இருந்ததென்பது உறுதியாகும்.

---

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[ஆட்சிமொழிக்காவலர், கீ. இராமலிங்கனர், எம். ஏ.,
[உறுப்பினர், தமிழக அரசின் ஆட்சிமொழிக் குழு]

(சிலம்பு சகூ, பரல் கக பக்கம் ௫0சஇன் தொடர்ச்சி)

i. Visitors; ii. Interview; iii. Visiting Card; iv. Paper Weight. v. Call Bell; vi; -Do-

i. Visitors : இச் சொல், இரண்டு பொருளில் வழங்கப் பெறுகிறது. (1) ஒன்று, 'பார்வையிட்டு, நிறைகுறைகளை எடுத்துக்கூறும் உரிமையுடையவர்கள்' என்னும் பொருளில் 'பார்வையாளர்' என்று வழங்கும் சொல். அவர்களின் பார்வைக் குறிப்பின்மீது ஏற்புடைய நடவடிக்கை எடுக்கப் பெறும். இவர்கள் தாம் செய்யும் வேலையான பார்வையை ஆளுபவர்கள் ஆவர். இப்பொருள் 'Jail Visitors', 'Hospital Visitors' 'Health Visitors' என்னும் தொடர்களில் வருகின்றது. இவை முறையே சிறைப் பார்வையாளர், மருத்துவமனைப் பார்வையாளர், நலப் பார்வையாளர் எனப்பெறும்.

(2) இரண்டாவது பொருள் ஓர் அலுவலரைக் கண்டு பேச வருபவர்கள். இவர்களைக் 'காணவருநர்' எனலாம். இவர்கள் அலுவலரிடமிருந்து ஏதேனும் நன்மையோ தங்கள் ஐயத்துக்கு விளக்கமோ, பெறச் செல்பவர்கள். அதிகாரத்துடன் அலுவலரை அணுகுபவர்கள் அல்லர்.

ii. Interview : நேர் காணல், நேர் காண்பு. Interview time for visitors :- காணவருநரை நேர்காண் நேரம். இதனைச் சுருக்கிக் 'காணவருநர் காணும் நேரம்' என்றும் சொல்லலாம். இன்னும் சுருக்கிக் 'காணும் நேரம்' என்ருலும் சாலும். பார்வையாளரைப் பார்க்கும் நேரம் என்று கூறுவது பொருத்த மாகாது.

iii. Visiting card : காண்சீட்டு. ஆங்கிலத் தொடருக்குள் அடங்கிய பொருள் அனைத்தும், இத் தமிழ்த் தொடருக்குள்ளும் அடங்கியுள்ளது.

iv. Paper weight : தாள் பளு. தாள் பறந்தோ, அசைந்தோ போகாமல், அதன்மீது வைக்கும் பளுவான பொருள். ஆங்கிலத் தொடருக்கும் இதே பொருள்தானே ?

v. Call bell : கூமணி. கூப்பிடுவதற்குப் பயன்படுத்தும் மணி. 'அழைப்பு மணி' என்றும் சொல்லலாம். எனினும் 'கூமணி' சிறியதாகவும் பொருத்தமாகவும் இருக்கிறது. 'அழைத்தல்' என்பதில் 'விரும்பிக் கூப்பிடுதல்' என்னும் கருத்து இருக்கிறது. 'திருமண அழைப்பு' என்பதன் பொருள் நமக்குத் தெரியும். கூவுதல், கூப்பிடுதல் என்னும் சொற்களில் அவ்விருப்பக் கருத்து இல்லை. 'கூ' என்னும் ஓர் எழுத்தே, கூவுதல், கூப்பிடுதல் என்னும் சொற்களின் பொருளைத் தந்து விடுகிறது.

vi. -do- : 'Ditto' என்பதன் சுருக்கமே 'Do' என்பது. இச் சொல்லின் முதல் எழுத்தான 'D'ஐயும், கடைசி எழுத்தான 'O' ஐயும் சேர்த்து 'Do' என்று எழுதுகிறோம் 'Ditto' என்று உச்சரிக்கிறோம். அதேபோல் 'மேற்படி' என்னும் சொல்லின் சுருக்கம் 'ஷ' என்பது இச் சொல்லின் முதல் எழுத்தின் முதல் வரிவடிவமான 'ே' ஐயும் 'டி' என்னும் கடைசி எழுத்தையும் சேர்த்து ஷ என்று எழுதி மேற்படி என்று உச்சரிக்கிறோம்.

———

## 'தாசன்' என்ற சொற்பொருள்

*பாரதிதாசன், கண்ணதாசன், கம்பதாசன் என்ற கவிஞர் பெருமக்கள் பெயர்களில் 'தாசன்' என்ற வடசொல் என் மனத்தை உறுத்துவதாக இருந்து வருகின்றது. அவர்கள் தம் இயற்பெயர்களை மாற்றி அமைத்துக்கொண்ட பெயர்கள் இவை என்பதை யாவரும் அறிவர். 'தாசன்' என்னும் வடசொல் அடிமை, அடியான் என்றும் பொருள் தரும் சொல்லாகும்.*

*அடிமை என்னும் பொருள் தெரியாமல் அவர்கள் தம் பெயர்களை அமைத்துக் கொண்டார்கள் என்று குறை கூறுதற்கில்லை. எனினும் அறி—அறிஞன், கவி—கவிஞன், கலை—கலைஞன், வலை—வலைஞன், வினை—வினைஞன், இழி—இழிஞன் என்பன போல, வழி—வழிஞன் எனப் படைத்தமைக்கலாமல்லவா? வழிஞன் எனின் வழி வந்தவன்—வழியைக் கடைப் பிடித்தவன் என்ற பொருள் தருமன்றோ? அங்ஙனமாயின் பாரதி வழிஞன், கண்ணன் வழிஞன், கம்பன் வழிஞன் என்று நம் பெருமதிப்புக்குரிய கவிஞர் பெருமக்களை அழைப்பது எத்துணை இன்பந் தருவதாயிருக்கும்! இதனை அறிஞர் பெருமக்கள் சிந்தனைக்குக் கொண்டு வருதல் வேண்டுமென்பதே எனது விருப்பம்.*

வ. சு.

# வண்ணச்சரபம் தண்டபாணியடிகளுக்குத் திருவள்ளுவர் மாமனர். எப்படி?

[தவத்திரு தி. செ. முருகதாச சுவாமிகள்]

திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவர். வண்ணச்சரபம் தண்டபாணியடிகள் சென்ற பத்தொன்பதாம் நூற்ருண்டில் வாழ்ந்தவர். இவ்விருவரது கருத்தொற்றுமையையும், திருவள்ளுவரை மாமனுரென்ற முறையையும் பற்றி இதிற் காணவுள்ளோம்.

நம் தமிழ்நாட்டில் வாழ்ந்த அருளாளர் பலர். அவர்கள் வரலாற்றில் மாறுதல்கள் மிகப் பல. அம் முறை திருவள்ளுவரையும் விடவில்லை. அவர் பிறப்பு, வளர்ப்பு, வாழ்க்கை, ஊர், சமயம் முதலியவற்றிலும் அவர் மனைவி வாசுகி யென்பதிலும் ஆராய்ச்சியாளர் தத்தம் கருத்துக்கேற்ப ஆதரவு கூறி விளக்கலாயினர். இரண்டாயிரம் ஆண்டு வந்தாலும் வந்தது. அவரியற்றிய திருக்குறளைப் பல்வேறு கோணங்களில் வைத்து, கருத்தரங்கு, பட்டிமண்டபம் இவற்றின் வாயிலாகத் திருவள்ளுவரைப் படாதபாடு படுத்தி விட்டனர். ஆனல், இதற்காகத் திருக்குறளைத் துருவிப் படிக்கும் வாய்ப்பு பலருக்கேற்பட்டது. நேரிலும் வானெலி மூலமும் கேட்டபோது இனிமையாகவே இருந்தது. திருவள்ளுவர் ஆவியுலகத்திலிருந்து கேட்டிருப்பாராஞல், எப்படி நினைத்திருப்பாரோ யார் கண்டது!

இதில் அப்படிப்பட்ட வாதமோ, மோதலோ சிறிதுமில்லையென்பதை முதலிற் கூறலானேன். வரலாற்றைப் பற்றியோ, திருக்குறளைப் பற்றிய ஆராய்வோ சிறிதுமில்லை. பின் யாதெனில், திருவள்ளுவரிடம் தண்டபாணியடிகள் கொண்ட தொடர்பு, கருத்தொற்றுமை உடையவரானுர் என்பதைப்பற்றிச் சிறிது விளக்கவேயாம். இவ்விருவரது தொடர்பைப் பற்றி, ஒரு துறவி எவ்வாறு பாராட்டினர் என்பதைக் குறிப்பிடும் வகையும் ஒன்று.

தண்டபாணியடிகள், திருவள்ளுவர் செய்த திருக்குறளின் வழி வாழ்ந்தவர். அவர் கருத்தைத் தம் நூலில் எடுத்தாண்டு மகிழ்பவர். அவர் கூறிய அருளுரையை மனவெளியிற் கண்டபோது கேட்டவர். அவர் இயற்றிய திருக்குறள் நூலுடன் தொடர்பு கொண்டவர் அடிகளென்பதைக் காரணத்துடன் பலர் போற்ற வாழ்ந்தவர் என்பதை இதிற் காணலாம். திருக்குறளைப் பல காலம் பயின்றவரும்கூடத் திருவள்ளுவரைக்

கண்டதில்லை. காண விரும்பியவருமில்லை. திருவள்ளுவர் தம் மனவெளியிற் காட்சி வழங்கிக் கூறிய அருளுரையை ஒரு கவியில் விளக்கினர் அடிகள்:

"வெண்கலையும் வெள்ளேடும் கொண்டொருநற்
றவசிவந்து விளங்கி னுன்முன்
வண்கவிமிக் குரைத்ததிரு வள்ளுவனர்
எனத்தெரிந்து வணங்கி னேன்பின்
ஒண்கருத்தின் விழை(வு)யா தெனக்கேட்டான்
இனிப்பிறப்பில் உறுமை யென்றேன்
கண்களின்மேல் ஆணைஅந்த வண்ணமெய்தும்
எனவாயாற் கழறி னனே" (குருபரதத்துவம்)

இவ்வாறு திருவள்ளுவரை மனக்கண்ணுற் கண்டு, அவரருள் மொழி கேட்டு, அவர் திருக்குறட்கருத்தை மனத்துட் கொண்டு, நூல் பல இயற்றினர். அந்த நடையில் "வருக்கக் குறள்" "மநுநெறித் திருநூல்" இயற்றினர். இதை நூற்று முப்பது அதிகாரத்தில் முடித்தனர். மூன்றதிகாரம் குறைவு. முந்நூற்று முப்பது குறள் என்று சமமாகவோ, கூட்டியோ கூறக்கூடா தென்ற பணிவு காரணம். இப்படிச் செய்த நூற்கு ஆதாரமெது? என்ற வினுவுக்கு விடையாக, "இப்பா ருலகறிய ஏழெழுவர் தம்மைவென்ருன், முப்பால்வெண் பாட்டே முதல்" என்றனர். முதல் அதிகாரத்தின் முதற்குறட்பாவில், "அறத்திலறம் சொல்லாமை" என்றே தொடங்கினர். மொழி முதலில் வராத அக்கரங்கட்கும் உயிரெழுத்தொடு புணர்த்தி, தமிழின் எல்லா அக்கரங்களையும் முதலில் வைத்துச் செய்துள்ள நூல்" வருக்கக் குறள். இதன் இறுதிக் குறட்பாவில், ஔவை, திருவள்ளுவர் இயற்றிய நூல் களைப்படிப்பாய் என்ற கருத்தில் முடித்தனர். இறுதி எழுத்து னௌ - ஆதலின், "இனௌவற் கனிஎறிந்தாற் கேற்றதமிழ்ப் பாடல்-பனௌவை வள்ளு வன்சொல் படி" என்பதாகும்.

இன்நவ்வற்கனி-பன்அவ்வை, என்ற இரு மொழிகளை இணைத்து "னௌ" என்ற அக்கரத்தைப் பயன்படுத்தி-நூலின் கருத்துக்கிசைய ஔவை திருவள்ளுவரைப் பாராட்டிய தால் அவ்விருவர் பற்றியிருந்த உள்ளன்பு தெரிகிறது.

திருக்குறளை, கொல்லாத வேதம், நல்ல வேதம், தமிழ் மறை என்றெல்லாம் கூறுவர். வடமொழி வேதம், வேள்வி யில் உயிர்க் கொலை செய்து, உயிர் நீக்கப்பெற்ற உடலின் ஊனை, சிவன் முதலிய தெய்வங்களின் பேரால், இந்திராதிய தேவர் பேரால், அவியாக ஊட்டும்படி கூறியது. எஞ்சிய

பரல்-க] வண்ணச்சரபம்...திருவள்ளுவர் மாமனூர். எப்படி? சக

ஊனே வேள்வித் தலைவராதியோர் பிரசாதமாக உண்கின்றனர். இவர் பூர்வமீமாம்சிகளெனப்படுவர். தமிழ்வேதமோ எனில், எவ்வாற்றானும் உயிர்க்கொலை, ஊன் உணவு கூடாதென்று முழங்குகிறது. நூறு குதிரையைக் கொன்று செய்யும் வேள்வி ''அஸ்வமேதம்'' எனப்படும். இதன் பலன் இந்திரப் பதவியே யாம். இந்திரப் பதவியென்ன, வேறு எந்தப் பதவி வருவதா யினும், கொன்று ஊன் உண்ணலாகாதென்பது தமிழ்மறை.

''அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்[து] உண்ணாமை நன்று''

எனவும்,

''நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும், சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை''

எனவும்,

''கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்''

எனவும் கூறினர்.

''அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல் பிறவினை'' என்பது தமிழ் வேதத்தின் செம்மையான கருத்து. கொலை வேள்வி செய்யும் ஒருவனைக் கண்டபோது, ஆடு அழுமா-தொழுமா என்ற வினாவை யெழுப்பி, கொல்லானைக் கண்டு தொழும் என்றதோடு விடாமல், கொல்பவனைக் கண்டவுடன், 'அழும்' என்று கூறக்கூட மனமின்றி குறிப்பால் அறியவைத் தார். எங்கே தன்னைப் பற்றிக்கொண்டு போவானோ என்ற அச்சமிகுதியே அழக் காரணமாயிற்று.

திருவள்ளுவர் நூற்கருத்தில் ஆழ்ந்த பற்றுடன் வேள்விக் கொலையை அறவே வெறுப்பவர். தண்டபாணியடிகள். தாமியற்றிய சத்திய சூத்திர நூலில்,

''வேதம் சொல்லினும் விரிஞ்ச னாதியர்
நேரிற் கூறினும் நீசர்க் குரித்தாம்
கொலைபுலை செய்தல் கூடா[து] அன்றே''

எனவும்,

''சீரருள் விழைவோன் தெய்வப் பிராமணன்
அழற்றசை நுகர்வோன் அசுர வேதியன்''

எனவும் கூறினர்.

ஓர் உயிரை வெட்டிக் கொலை செய்தபோது, அவ்வுடல் படும் வேதனையை எண்ணக்கூட முடியவில்லை. பீசமர்த்தனத் தால் கசக்கிக் கொல்லும்போது எப்படிச் சகிப்பது? எனவே தான் அசுரவேதியன் என்ருர். எல்லாவுயிரையும் தெய்வ வடிவாகக் காணும் பிரமஞானமுடையவன் அந்தணன் என்றது தமிழ் வேதம்.

*"அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்*
*செந்தண்மை பூண்டொழுக லான்"*

என்பதாகும்.

*"இரக்கமிலா மாந்தர்க்[கு] இயலுணர்ந்தோர் கூடி*
*அரக்கரெனப் பேரிட் டனர்"*

என்பர் அடிகள்.

*"நான்முகன் தக்கன் முதலோர் அனேகர் நவின்றவட*
*நான்முழு தும்கொலை வேள்வியைப் போற்றும் நுடங்கரிய*
*வேன்முனைக் கண்ணவை வள்ளுவ னுதியர் விண்டதென்னால்*
*ஊன்முழுப் பாவம் எனவே அடிக்கடி ஓதிடுமே"*

—தமிழலங்காரம்.

*"கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே*
*நின்ற பாவம் புலைகள் தீரத் தொழுமின்கள்"*

என்றும்

*"வட்டக் குண்டத்தில் எரிவளர்த் தோம்பி மறைபயில்வார்*
*அட்டக் கொண்டுண்ப தறிந்தோமேல் நாமிவர்க் காட்படோமே"*

என்றும், கொலை வேள்வியையும் இறைவன் அவியுணவை ஏற்பான் என்பதையும், ஆதிசைவ அந்தணரான சுந்தரமூர்த்தி நாயனுர் ஒப்பவில்லை. "சாவமுன்னுள் தக்கன் வேள்வித்தகர் தின்று" என்பர், மணிவாசகர் இப்படித் தெய்வத் திருமறைகளும் திருக்குறட் கருத்துக்கிசையவே கூறியுள்ளன. "எல்லா இடத்தும் கொலை தீது" என்பது நான்மணிக்கடிகை.

இராயவேலூரில் அடிகள் தங்கியிருந்த சமயம், சிலர் வந்து மொழிவாதமியற்றினர். வடமொழி உயர்வென்று பல கூறினர் வந்தோர். அடிகள், தமிழில் வேதமுண்டு. ஆட்டை வதைத்துக்கொன்று ஊன் அவியிடுமாறு கூறவில்லையென்று கூறினர். தாமியற்றிய புலவர் புராணத்தில் திருவள்ளுவர் சருக்கமொன்றமைத்தனர். அதில் திருக்குறளைப் பற்றிக் கூறும்போது,

''நால்வர்சொல் சைவர் வேதம் நளிர்குரு கூரான் சொல்லும்
போல்வலார் சிலர்தம் சொல்லும் பொருவில்பா கவதர்தம் வேதம்
வால்வளை யுலவும் வீதி மயிலேவள் ளுவன்சொல் யார்க்கும்
மேல்வழி யுணர்த்திக் கீழ்மை விலக்கும்நல் வேத மாமே.''

என்று பாராட்டுகின்றனர். மேலும், ''பொது நூல், சிறப்பு நூல், திருவெண்பா, விற்பனம், அருளாட்சி'' என்ற ஐந்து நூல்களைத் தண்டபாணியடிகள், வெண்பா நடையில் இயற்றினர். அது சமயம் விழுப்புரத்தையடுத்த வளவனூர்க் குமாரபுரி மடத்தின் தலைவராய், அடிகளுடன் அன்புப் பிணைப்புற்று வாழ்ந்தவர் சண்முகசுவாமிகள் என்பவர். அவர் இந்த ஐந்து நூல்களையும் கண்டு, பொருளுணர்ந்தனர். வியப்பு அவரை விழுங்கிற்று. இரண்டு வெண்பாக்கள் சிறப்புக் கவியாகக் கூறினர்.

திருவள்ளுவர் செய்த திருக்குறள் காலத்தால் முந்தியது. பழைமையுடையது. இந்நூல் புதுமையாயினும் அதே கருத்தைக் கொண்டும் திகழ்கிறது. எனவே, அதன் மகள்போலிருக்கிறது. மரபு வழுவாமலுமிருப்பதால் என்மனம் இவற்றை விரும்பு கிறது. அதோடு, உலகினர் 'ஐந்து பெண் பெற்ருல் அரசனும் ஆண்டி' என்பர். அதுபோல இந்த ஐந்து நூற்பெண்களைப் பெற்ற அடிகள் துறவியானுர்.

ஆதிபகவன் என்ற தாய் தந்தையரின் மக்களான எழுவரில் திருவள்ளுவருடன் உதித்தவள் வள்ளியென்பவள் ஒருத்தி. அவள் திருமுருகன் மனையாள். முருகன் தந்தை. தாய் வள்ளி. இவளுடன் பிறந்த திருவள்ளுவர் தாய்மாமனுவார். மாமன் பெண் தருதல் முறை. திருக்குறளென்ற பெண்ணைக் கருத்துட் கொண்டு நூற்சுவை யறிந்து, அதன் சாரமான இந்நூல்களைப் பெற்றதனுல் திருவள்ளுவர் மாமனுர். திருக்குறள் மனைவி. ஐந்து நூல் பெண்மக்களாயினர். தண்டபாணியடிகட்குப் பழை மையில் உயர்விருப்பினும் புதுமையை விரும்புவது மன இயல் பாதலின் இந்நூற்கருத்தை என்மனம் ஏற்றதென்பது கவியின் திரண்ட கருத்தாகும்.

''வள்ளுவனர் தம்மருகன் வள்ளிதரும் மாண்புதல்வன்
கொள்ளுமுறை யாற்குறளைக் கூடியே தெள்ளுதமிழ்ப்
பாண்டியினில் ஐந்துநன் னூற் பாவையரைப் பெற்றதனுல்
ஆண்டி யுருவாய்த் திகழ்கின் ருன்.''

''வேய்கிளர்தோள் மெல்லிநல்லார் மெய்ப்பருவ மெய் துங்கால்
தாய் கிழவியாதல் சரதமால்—ஆய்குறட்பெண்
ஆன்றதண்ட பாணியைச் சேர்ந்[து]ஐந்துபெண்பெற் ருளதனுல்
யான்றழைக்கும் மோகமெய்தி னேன்''

என்பதாகும்.

இந்தப் பொது நூல், சிறப்பு நூல், திருவெண்பா, விற்பனம், அருளாட்சி என்ற ஐந்து நூல்களையியற்றியவரும், இக் கவிகள் இரண்டினைக் கூறியவரும் துறவியரேயாம். ஐம்புலன் களின் இன்ப நுகர்ச்சியை முனிவராவோர் துறக்கக்கூடும். அவர்களாலும் துறக்க முடியாதது, தமிழின்பம் ஒன்றேதான். இக் கருத்தினைத் தண்டபாணியடிகள் ''வருக்கக் குறளில்''

''சுண்ணந் திமிர்ந்தமுலைத் தோகையர்சொற் கைப்போரும்
வண்ணத் தமிழ்க்குருகு வார்''

என்றருளியுள்ளார்.

இதற்குச் சான்று, சண்முக சுவாமிகள் உள்ளத்தைக் கவர்ந்தது தமிழ்நூல்களேயாகும். அத்தகைய சுவையான அருள் நூல்கள் பலவற்றையருளியவர், வண்ணச்சரபம் தண்டபாணியடிகளாவர்.

இவ்வாறு, தம் நூல்கள் பலவற்றில் திருக்குறட் கருத்தினை எடுத்து ஆண்டு மகிழ்வர்; பாராட்டுவர். இதனை அறிந்து, திருவள்ளுவரை மாமனுரென்ற முறையை ஊகித்துணர்ந்து, நூலின் தகுதிகண்டு, தம் கருத்தை விளக்கிய சண்முக சுவாமிகளின் தமிழ்ப் பற்றையும் பாராட்டக் கடவோம்.

கடவுள் தொடர்பை முறைவைத்துப் பாடினர் தண்டபாணி யடிகள். திருவள்ளுவரோடு தொடர்பு வைத்து முறைகூறிப் பாராட்டினர் தண்டபாணியடிகளை வளவனூர் அடிகள். தமிழுடன் தொடர்புகொண்டு நோக்கும்போது யாவும் இனிமையே தருகின்றன. நலம்.

---

## வள்ளுவர் சைவ சமயத்தவரே

திருவள்ளுவரியற்றிய திருக்குறளின் கொள்கைகளை நடுநின்று ஆராய்ந்து பார்க்கும் மெய்யறிவாளர்கள், அது சைவக் கோட்பாடுகளைத் தவிர வேறு மதக் கோட்பாடுகளை உள்ளடக்கியது அன்றென்பதை அறிவார்கள். அவர்கள் கடவுள்வழிபாட்டையும், அக் கடவுள் வழிபாடு செய்யும் உயிர்கள் உண்டென்பதையும் வற்புறுத்திச் சொல்லி யிருத்தலாற், கடவுளும் உயிரும் இல்லையென்னும் பௌத்த சமயத்தை அவர் தழுவியவர் ஆகார்.

மறைமலையடிகள்

(மறைமலையடிகளார் உரைமணிக்கோவை, பக். 69)

# மறைமலையடிகள் நூல்நிலையம் 17ஆம் ஆண்டு நிறைவு

சென்னை லிங்கிச் செட்டித் தெருவில் அமைந்துள்ள மறைமலையடிகள் நூல்நிலையம் தொடங்கி 17 ஆண்டுகள் நிறைவெய்தின. மறைத்திரு மறைமலையடிகளாரின் தொகுப்பு நூல்களுடன் 1958இல் தொடங்கப் பெற்ற இந் நூல்நிலையம் இன்று முப்பதினாயிரம் நூல்களுக்குமேல் இடம் பெற்றுள்ளது.

சென்னை, மதுரை, அண்ணாமலை, கேரளம், திருப்பதி போன்ற பல்கலைக் கழகங்களில் எம்.ஏ., எம்.ஓ.எல். பட்டங்களுக்கு ஆய்வுக் கட்டுரை எழுதுவோருக்கும் எம்.லிட்., பி.எச்.டி. போன்ற மேற் பட்டப் படிப்பு ஆராய்ச்சியாளர்கட்கும் பிற பேராசிரியர்கட்கும் தமிழறிஞர் கட்கும் பயன்படும் வகையில் உள்ளது. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தன் வருவாயில் கிடைக்கும் ஊதியத்தின் ஒரு பகுதியைக் கொண்டு அறப்பணியாக நடத்திவரும் இந் நூல்நிலையம் தமிழ்நூல் ஆராய்ச்சியாளர்கட்கு ஒரு மாபெரும் கலங்கரை விளக்கமாக அமைந்துள்ளது.

தமிழ்நாட்டு வரலாறு, இலக்கியம் போன்றவற்றில் ஆய்வு செய்யவரும் பிரான்சு, அமெரிக்கா, பிரிட்டன், செக் முதலிய வெளிநாட்டு அறிஞர்கள் இந்நூலகத்தில் காணப்படும் அரிய நூல்கள் வேறெங்கும் காணக் கிடைக்காதவை என்று வியந்து பாராட்டுகின்றனர்.

1974-75ஆம் ஆண்டில் இந் நூலகத்தைப் பயன்படுத்தியோர் எண்ணிக்கை 25,701. அவர்கள் படித்த நூல்கள், தமிழ் 3243. ஆங்கிலம் 1863. இவ்வாண்டு புதிதாகச் சேர்க்கப் பெற்ற நூல்கள் 1559.

வீட்டிற்கெடுத்துச் சென்று படிப்பதற்காக வழங்கும் பகுதியொன்று நூலகத்தின் மேல் பகுதியில் தனியாக இயங்குகிறது. அதில் உள்ள உறுப்பினர்களின் எண்ணிக்கை 620. அப் பகுதியிலுள்ள நூல்கள் 4541.

இவ்வாண்டு இந் நூலகத்தைப் பார்வையிட்ட பெருமக்களுள் குறிப்பிடத்தக்கோர் :

திருமதி ஏ.எல். நிஸ்கான், (சிகாகோ பல்கலைக் கழக நூலகம்). திரு. டேவிட் லடன் (பென்சில்வேனியா பல்கலைக் கழகம்). திரு. கிரிஸ் பேகர் (கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகம்). திரு. டுவர் டியர் (பிரெஞ்சுக் கல்லூரி, பாரிசு) டாக்டர் எப். இ. குரோ (பிரெஞ்சு இந்தியப் பண்பாட்டு நிறுவனம்) திரு. சி. ஜி. ரங்கபாஷ்யம், ஐ.ஏ.எஸ்., (தமிழக அரசுக் கல்வித்துறைச் செயலர்) டாக்டர். ஏ. கந்தையா (இலங்கைப் பல்கலைக் கழகம்). டாக்டர் இ. அண்ணாமலை, டாக்டர். பி. பி. ராஜ் புரோகிட் (இந்திய மொழிகளின் மைய நிறுவனம். மைசூர்.)

———

# மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு பிரெஞ்சு அறிஞர் திரு. குரோவின் பாராட்டு

பாரிசிலுள்ள கீழ்த்திசைக் கல்லூரியிலும் பாண்டிச்சேரியிலுள்ள பிரெஞ்சு இந்தியப் பண்பாட்டு நிறுவனத்திலும் பணியாற்றும் திரு. எப். இ. குரோ (F. E. GROS) அண்மையில் சென்னை, மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு வருகை தந்தார்.

தமிழில் வெளிவந்துள்ள அகர முதலிகளைப் பற்றிய ஆய்வை மேற்கொண்டுள்ள இவர் அதன் தொடர்பாக நூலகத்தில் தொகுத்து வைக்கப்பெற்றுள்ள அகர முதலிகளைப் பார்வையிட்டார்.

தாம் முன்பு கேள்விப்படாததும், கேட்டும் நேரில் கண்டிராததுமான பல அகர முதலிகளை நூலகத்தில் கண்ட திரு. குரோ இத்தகைய தொரு தொகுப்பை எந்நாட்டிலும் தாம் காணவில்லை என்று குறிப்பிட்டார்.

அவர் நூலகத்தின் பார்வையாளர் ஏட்டில் கீழ்க்கண்டவாறு எழுதியுள்ளார் :—

'இந் நூலகத்தின் பெயரும் இது தமிழ் ஆய்வுக்குச் செய்து வரும் அருந்தொண்டும் ஏற்கெனவே பெரும்பாலான மக்களுக்குத் தெரியும். ஆனாலும் புத்தகங்களை இவ்வளவு கருத்துடனும் அன்புடனும் பாதுகாத்து வைத்திருப்பவர்களைக் கண்டு அவர்களுடன் பழகுவதும், கிடைத்த ஒரு சில மணி நேரங்களை மிகவும் பயனுள்ள வழியில் செலவிடுவதும் எப்போதுமே ஓர் இன்பமான அனுபவம்தான். அவர்களுடைய பயனுள்ள, அறிவார்ந்த உதவிக்கு நன்றி. தன்னிடமுள்ள நூல்களால், தேர்ந்தெடுத்துச் சேர்த்துத் தொகுத்துள்ள முறையால் புத்தகங்களைப் பாதுகாத்து வைத்திருக்கும் பாங்கினால் இந்நூலகம் தமிழ் ஆய்வுக்கு மிகப் பெருமை வாய்ந்த தொண்டைச் செய்து வருகிறது. இதனுடைய தேசிய, அனைத்துலகப் புகழுக்கேற்ற வகையில் இது தகுதியுடையதாய் இலங்குகின்றது.

"Many people know already about the name of the library and the services rendered to Tamil Studies. But it is always a pleasant experience to come and enjoy the company of those who treasure the books with such care and love, to spend the few available hours in the most useful way thanks to their helpful and learned assistance. By its contents its selective acquisitions, the way books are kept and preserved the library renders a distinguished service to the cause of Tamil Studies and is well worth of its national and international fame."

F. E Gros
Ecole Francaise do
Extreme - Orient
Paris
c/o French Institute
of Indology,
Pondicherry-605001.

# கழகத்தின் முப்பெரு விழாக்கள்

மறைமலையடிகளாரின் 99 ஆவது பிறந்தநாள் விழா, ‘செந்தமிழ்ச் செல்வி’ பொன் விழாப் புகுமுக விழா, பேராசிரியர் க. அன்பழகன் அவர்களெழுதிய ‘தமிழ்க் கடல் அலை ஓசை’ நூல் வெளியீட்டு விழா ஆகிய முப்பெரு விழாக்கள் 14-8-75இல், சைவ சித்தாந்த சங்கத்தின் சார்பில்இலிங்கிச் செட்டித் தெரு வள்ளலார் திருவருள் மண்டபத்தில்தமிழக உயர்நீதிமன்ற நடுவர் மாண்பமை எஸ். இரத்தினவேல் பாண்டியன் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

இவ் விழாவினை யொட்டி, அடிகளார் நூல்கள், ‘செல்வி’ தொகுதிகள், பிற அரிய நூல்கள் அடங்கிய புத்தகக் காட்சி யொன்றும் அமைக்கப் பெற்றிருந்தது.

விழா நிகழ்ச்சிகளின் சுருக்கம் வருமாறு :

மாண்பமை எஸ். இரத்தினவேல் பாண்டியன் அவர்கள் ‘தமிழ்க் கடல் அலை ஓசை’ நூலினை வெளியிட்டு ஆற்றிய தலைமை உரையில், ‘தமிழ்க் கடல் அலை ஓசை’ என்னும் இப் புத்தகத்தைப் பேராசிரியர் அவர்கள் எழுதியிருக்கிருர்கள். இப் புத்தகத்தை வெளியிடுகின்ற பேறு கிடைத்தமைக்குக் கழகத்தார்க்கு நான் நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஐந்தாண்டு காலமாகப் பொது வாழ்விலிருந்து விலகியிருந்த எனக்கு இந்தப் பொதுக் கூட்டம்தான் முதல் கூட்டமாக அமைந்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதுவும் நம்முடைய பேராசிரியர் அவர்களின் புத்தகத்தை வெளியிடும் விழாவாக அமைந்திருப்பது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி அளிக்கிறது.

சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம் என்ற ஒரு தமிழ்ச் சங்கத்தினுடைய தலைவராக நாங்கள் இருவரும் ஆறு ஆண்டு காலம் இருந்திருக்கிறோம். எங்களிடம் ஏராள மான பணம் இருந்துங்கூட இந்தத் தமிழ்ச் சங்கத்திற்கு எதுவும் செய்ய முடியாத இக்கட்டான நிலைமையில் இருந்து விட்டோம். நான் ஐயா அவர்களிடம், ‘‘இருக்கின்ற பணத்தைத் தமிழின் வளர்ச்சிக்காக, அரசாங்கத்திடமிருந்து அனுமதி பெற்று நீங்கள் எப்படிச் செய்யவேண்டுமென்று சொல்லுகிறீர்களோ, அப்படி அதையெல்லாம் செலவழித்துத் தமிழ்மொழி வளர்ச்சிக்கு நானும் உங்களோடு உறுதுணையாயிருப்பேன்’’ என்று சொல்லியிருக்கிறேன்.

இப்போது எல்லாரும் தமிழினத்தின் வளர்ச்சிக்காகப் பாடுபடுகின்ற காலம் வந்துள்ளது. அந்தக் காலத்தை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இந்தத் 'தமிழ்க்கடல் அலை ஓசை' புத்தகத்தை வெளியிடும் பொறுப்பினை எனக்களித்தமைக்காக என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்,'' என்று கூறித் ''தமிழ்க்கடல் அலை ஓசை'' நூலினை ஆட்சிமொழிக் காவலர் திரு. கீ. இராமலிங்கனார் அவர்களிடம் அளித்தார்.

நூலின் சிறப்புப் பற்றி டாக்டர் மெ. சுந்தரம் எம். ஏ., எம். லிட், பி. எச். டி, அவர்கள் ஆற்றிய உரையின் சுருக்கம் :

பேராசிரியர் அவர்கள் தமக்கே இயல்பாக உள்ள நுண் மாண் நுழைபுலத்தோடும், ஆராய்ச்சி உணர்வோடும், தமிழுக்குத் தொண்டாற்றிய ஒவ்வொருவரிடத்தும் நான்கு சிறப்பியல்புகளைத் தேடி யெடுத்துப் பதினாறு பேர்களைப் பற்றி எழுதியிருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட பேராசிரியர் அவர்கள் ஆழ்கடலுக்குள்ளே மூழ்கி முத்தமிழ் முத்துக்களைக் கொண்டுவந்திருக்கிறார்கள். கொண்டுவந்திருக்கும் நேரம் தமிழ் அரியணையில் இருக்கும் நேரம். தமிழ் செங்கோல் செலுத்துகின்ற நேரத்தில் இந் நூலைக் கொண்டுவந்திருப்பது பெரிதும் போற்றிப் பாராட்டற் குரியது.

டாக்டர் ச. வே. சுப்பிரமணியம் அவர்கள் செந்தமிழ்ச் செல்வி யினைப் பாராட்டுமுகத்தான் ஆற்றிய உரைச்சுருக்கம் வருமாறு :

''தமிழ் ஆய்வுகளைப் பற்றிய கட்டுரைகள் வந்துகொண் டிருக்கின்ற ஒரே பத்திரிகை 'செந்தமிழ்ச் செல்வி'. இஃது இந்தி எதிர்ப்புப் போராட்டம் நிகழ்த்தியிருக்கின்றது. தமிழைப் பற்றிய பேச்செல்லாம் மூச்செல்லாம் எங்கெங்கு தேவையோ அங்கெல் லாம் செந்தமிழ்ச் செல்வி குரல் எழுப்பி நிற்கின்றது. ஒரு நோக்கத்தோடு 50 ஆண்டுகட்கு மேலாக உழைத்து வருகின்ற ஒரேயொரு பத்திரிகை செந்தமிழ்ச் செல்விதான். இதைத் தொடர்ச்சியாக நடத்தி வருவது என்பது எளிய காரியமன்று. மறைந்த இலக்கியங்களைச் 'செந்தமிழ்ச் செல்வி' எடுத்துத் தருகின்றது. இந்த நிலையில் உயர்திரு. சுப்பையா பிள்ளை அவர்களுடைய தொண்டை, முழுநிலையில் பாராட்டிச் செந் தமிழ்ச் செல்வி நூருண்டுகள் வாழ்ந்து அதற்கு நூற்ருண்டு விழாவும் நடைபெறவேண்டுமென வாழ்த்துகிறேன்.

பேராசிரியர் அமீது அவர்கள் :

"இந்த நூலின் பெயர் 'தமிழ்க்கடல் அலை ஓசை'. இந்தக் கடலுக்கும் கன்னித் தமிழுக்கும் ஆயிரக்கணக்கான ஆண்டு களாகத் தொடர்பு இருந்துகொண்டே வந்திருக்கிறது. முற்கால பிற்கால இலக்கியங்களில் கடலைப் பற்றிய கற்பனைகள் உள்ளன. பேராசிரியர் அவர்கள் இந்த நூலுக்குப் பொருத்த மான பெயரையே அமைத்துள்ளார்கள். பேராசிரியர் அவர்கள் தனித் தமிழிலே தணியாத வேட்கை உடையவர். பேச் சொன்று, செயலொன்று என்ற கொள்கையினை அவரிடம் காணவே முடியாது. 'தமிழ்க் கடல் அலைஓசை' தமிழறிந்த மக்களெல்லாம் போற்றத் தகுந்ததும் பாராட்டத் தகுந்ததும் ஆகும்."

மகாவித்துவான் மே. வி. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் :

மறைமலையடிகளார் நூருண்டு நிறைவெய்தப் போகின் ருர்கள். செந்தமிழ்ச் செல்விக்கு ஆண்டு நிறைவு என்று சொன்னபோதிலும், அவள் நூருண்டு வாழவேண்டும் என்று விரும்புகிறேன்.

மறைமலையடிகளுக்குப் பின்னேதான் இந்தத் தனித் தமிழ் உணர்ச்சி மக்களுக்கு வந்தது என்பதில் யாருக்கும் ஐயுற வில்லை. அடிகளார் உரமான உள்ளம் உடையவர். விதியை யும் புறங்காணும் உள்ளம் உடையவர். தமிழ்த்தொண்டு செய்திருப்பவர்களுக்கு நம்முடைய தலை வணங்கும். இப்படிப் பட்ட புலவர்களிடத்தில் நாம் எவ்வளவு கடமைப்பட்டிருக் கிருேம் என்பதை உணர்ந்து நடந்துகொள்வதற்கு இத்தகைய பெருமக்களின் விழாக்களைப் போற்றுவதும் பாராட்டுவதும் பெருநலம் பயக்கத்தக்கவை.

சட்டமன்ற உறுப்பினர் ஆர்க்காடு நா. வீராசாமி அவர்கள் :

"வருகின்ருர் அன்பழகர் என்றெருநாள் கேட்டு, வாய்த் தது இனிச் செந்தமிழுக்கு ஆக்கம்தான் என்பேன்" என்று ஏறக்குறைய 27, 28 ஆண்டுகட்கு முன்பே பாரதிதாசன் அவர்கள்—நம்முடைய பேராசிரியர் அவர்களைப் பாராட்டியிருக் கிருர்கள். அப்படிப்பட்ட தமிழாசிரியர் அவர்கள்—நம்முடைய பேராசிரியர் அவர்கள்—இத்தனை ஆண்டுக்காலம் இருக்கின்ற தம்முடைய அறிவை—ஆற்றலை வெளிப்படுத்தவாய்ப்பில்லாமற் போயிற்றே என்பதுதான் நம்முடைய கவலை.

## மறைமலையடிகளார் 99-ஆவது பிறந்தநாள் விழாவும், செந்தமிழ்ச் செல்வி பொன்விழாவின் புகுமுக விழாவும், 'தமிழ்க்கடல் அலை ஓசை' வெளியீட்டு விழாவும் (14-8-75)



உயர்நீதிமன்ற நடுவர் எஸ். இரத்தினவேல் பாண்டியன் அவர்கள் தலைமையுரை ஆற்றுகிறார்.



உயர்நீதிமன்ற நடுவர்
நூலைத் திரு கீ. இராமலிங்கனாரவர்களிடம் வழங்குகிறார்.

அவர் இதைவிடப் பெரியதொரு தமிழ்த்தொண்டை ஆற்றியிருக்கின்ருர். காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் விலைவாசி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக அவரைச் சிறைச் சாலையில் வைத்திருந்தார்கள். அப்போது, உள்ளபடியே வள்ளுவன் தமிழ்ச் சமுதாயத்திற்கு எதைச் சொத்தாக வைத்து விட்டுப் போனுனே அந்த வள்ளுவன் குறளுக்கு—வள்ளுவர் இப்படித்தான் எழுதியிருக்க வேண்டும் என்ற உரையை அவர்கள் எழுதியிருக்கின்ருர்கள். ஏறக்குறைய 480 குறட்பாக் களுக்கு அவர் உரை எழுதியிருக்கின்ருர். நமது வற்புறுத்த லின்மீது என்றைக்காவது மீதிப் பாக்களுக்கு அவர் உரை எழுதக்கூடும். அறத்துப்பால் முடிந்திருக்கிறது. அதையாவது நம்முடைய சைவ சித்தாந்தக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் வெளியிட முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தமிழ் மணம் மங்கிவிடக் கூடாது—தமிழ் வீரம் மங்கிவிடக் கூடாது—தமிழ் அழிந்துவிடக் கூடாது; அதற்காக நாம் ஏதா வது தொண்டாற்ற வேண்டும் என்று சொன்னுல் அந்தத் தமிழுக்காகப் பாடுபட்டவர்களைப் பற்றி நினைவூட்ட வேண்டும்; இன்றைக்கில்லாவிட்டாலும் வருங்காலச் சந்ததிக்காவது பயன் படவேண்டும் என்பதற்காகத்தான் பேராசிரியர் அவர்கள் இந்த நூலை உருவாக்கியுள்ளார்கள்.

**நன்றி உரை :**

சங்கச் செயலர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களின் நன்றி உரை :

''மறைமலையடிகளார் காட்டிய வழியிலேதான் தமிழ் வளர்ந்துகொண்டிருக்கிறது. கழகமும் அவ்வழியிலேதான் செல் கிறது. நூல் வெளியிடுவதில் இந்தியாவிலேயே கூட்டுப் பங்கு நிறுவனமாக இருப்பது இந்தக் கழகமே. தமிழ் மொழி—தமிழ்நாடு—தமிழ்இனம் என்ற குறிக்கோளினின்று வழுவாது 'செந்தமிழ்ச் செல்வி' என்ற இதழ் நடந்து வருகிறது. இஃது ஒரு கலைக் களஞ்சியம்போல் நடைபெற்று வருகிறது. இங்கு வந்திருந்து இவ்விழாவினைச் சிறப்பித்த அனைவருக்குமே எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.''

———

# சென்னையில் தண்ணீர்ப் பஞ்சம்



குழாய்க்கிணற்றிலிருந்து அடித்துத்
தண்ணீர் பிடிக்குந் துன்பக் காட்சி.



தண்ணீர்த தொட்டியிலிருந்து மக்கள் தண்ணீர் பிடிக்குந்
துன்பக் காட்சி.

# செய்திகளும் குறிப்புகளும்

## சென்னையில் தண்ணீர்ப் பற்றுக்குறை

'விண் இன்று பொய்ப்பின்' என்றும் 'வானம் வழங்காதெனின்' என்றும் மழையிலாக் குறைவைப் பற்றி வள்ளுவர் தம் குறளில் பாடியிருப்பினும் அந் நிலையை நாம் உற்றறியும்போதுதான் அவர்தம் கூற்றின் பெருமை புலப்படுகின்றது.

கடந்த ஓராண்டுக் காலமாக மழை பொய்த்ததால் சென்னை மாநகர் இந்த நூற்ருண்டில் கண்டிராத தண்ணீர்ப் பற்ருக் குறைக்கு உள்ளாயது. சென்னை மாநகராட்சி மக்களுக்குக் குடிநீர் வழங்கப் பெரும்பாடு பட்டது. பிப்ரவரித் திங்கள் முதல் இதுவரை இரு நாட்களுக்கு ஒருமுறை அதுவும் ஒரு குறிப்பிட்ட நேரமே தண்ணீர் விட்டது.

மக்கள் தண்ணீருக்காகப் பேரல்லலுற்றனர். ஆங்காங்குக் குழாய்க் கிணறுகளும் கிணறுகளும் அமைக்கப்பெற்றன. பெரிய நீர்த் தொட்டிகள் வீதிகள்தோறும் இடம் பெற்றன. எல்லா இடங்களிலும் மக்கள் குடங்களையும் வாளிகளையும் தூக்கிக்கொண்டு நீருக்காக அலைந்தனர். ஒருவேளை நகர்மக்க ளனைவரையும் வெளியேற்றும் நிலை ஏற்படுமோ என்ற அச்ச மிருந்தது.

இடையில் எல்லாச் சமயத்தாரும் கூட்டு வழிபாடு நடத்தினர். சைவ சித்தாந்தக் கழகம் ஒருநாள் முழுவதும் தேவார இசைச் செல்வர்களைக் கொண்டு மழை வேண்டல் பதிகங்களைப் பாடச் செய்து 'மழை வேண்டல் வழிபாட்டை' நடத்தியது.

அம்மை அம்பலவாணர் அருளால் கடந்த இரு மாதங்களாகப் பிற ஆண்டுகளில் இம் மாதங்களில் பெய்யும் வழக்கமான மழையை விடக் கூடுதலாகவே மழை பெய்துள்ளது. சென்னை நகரின் நீர் நிலையும் சற்று முன்னேறியுள்ளதால் மீண்டும் நாள்தோறும் சென்னைக் குழாய்களில் நீர்வரத் தொடங்கியுள்ளது.

வறண்டு கிடந்த புழலேரியும் பூண்டி முதலிய பிற ஏரிகளும் ஓரளவு நிறைந்துள்ளன. இனி அடுத்து வருவது புரட்டாசி ஐப்பசி கார்த்திகை அடைமழைக் காலம். ஆண்டவன் அருளால் அப்போதும் மழை பெய்தால் ஏரிகள் நிரம்பும் நம்பிக்கை உளது.

எனினும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டேவரும் சென்னை மாநகரின் தண்ணீர்த் தேவையை வானம் பார்த்த இந்த ஏரிகளால் என்றென்றும் நிலையாகத் தீர்த்து வைக்க முடியாது. 'வீராணம் திட்டம்' எதிர்பார்ப்பதுபோல் நிறைவேறுமா என்பது ஐயமாக உள்ளது. அண்டை மாநிலமான ஆந்திரத்தின் உதவியோடு அதன் வற்ருத ஆறுகளிலிருந்து ஆண்டு முழுவதும் நாள்தோறும் தண்ணீர் சென்னைக்குக் கிடைக்குமாறு செய்தால்தான் சென்னையில் நீர் வேட்கை மறையும். ஏரிகள் நிறைந்து விட்டனவே என்று மன நிறைவுருது எதிர்காலத்தில் இதுபோன்ற நிலை மீண்டும் ஏற்படும் என்பதைக் கருத்தில் கொண்டு, நிலையான வழியை அரசு தேடவேண்டும்.

## நெருக்கடி நிலைச்சட்டம் விளைவித்த நன்மைகள்

நாட்டிற்கு நெருக்கடி நிலை உள்ளிருந்தும் வெளியிலிருந்தும் ஏற்படுவதுண்டு. இன்று அக நெருக்கடியைத் தவிர்க்கவே மாண்புமிகு பிரதமர் இந்திரா காந்தியார் நெருக்கடி நிலைச்சட்டத்தை 26 சூலைத் திங்களில் வெளிப்படுத்தினர். அவர் இந்த அவசரச் சட்டத்தை நிறைவேற்றிய போது அனைவருமே சற்றுத் திகைத்தனர்.

ஆனால், அதற்குப்பின் அவர் மேற்கொண்ட நடவடிக்கைகளும் 20 வகைப் பொருளியல் திட்டங்களும் நாட்டை நல்வழிப்படுத்துவன வாகவே அமைந்துள்ளன. புதிய பொருளியல் திட்டங்கள் நேர்மை யான ஆட்சிக்கு வழி வகுக்கும். நாட்டில் தொன்றுதொட்டு உள்ள அடிமைப் பழக்கத்தை அவர் அடியோடு அகற்றிவிட்டார். ஏழை எளியோர்க்கும் கிராமப் புற மக்களுக்கும் அவர் வகுத்துள்ள புதிய திட்டங்கள் மிகுந்த பலனளிக்கும்.

இவையனைத்துக்கும் மேலாக இப்போதுள்ள நெருக்கடி நிலையால் நாட்டில் ஒழுங்கும் அமைதியும் நிலவத் தொடங்கியுள்ளன. விலை வாசிகள் பல மாநிலங்களில் குறையத் தொடங்கியுள்ளன. கள்ளப் பணத்தைப் பதுக்கி வைத்துள்ள பெரும் பணக்காரர்களின் வீடுகள் சோதனை செய்யப்பட்டு, கணக்கில் வராத பெரும் பொருள் கைப்பற்றப் பெற்றுள்ளது.

கல்வித் துறையிலும் மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்வதை விட்டு விட்டனர். சில மாநிலங்கள் கல்லூரித் தேர்தல்களை நடக்க விடாது தடுத்துள்ளன.

தொழிற்கூடங்களும் வேலை நிறுத்தங்களைக் கைவிட்டுள்ளன. அரசு அலுவலகங்களிலும் பிற அரசு சார்புடைய அலுவலகங்களிலும் ஊழியர்கள் குறித்த காலத்தில் அலுவலகத்திற்கு வருவதோடு அலுவலக நேரத்தில் முழுமனதுடன் வேலை செய்கின்றனர். சில மாநிலங்கள் விடுமுறை நாட்களைக் குறைத்துள்ளன. ஊக்கமின்றியும் வேலையில் கவனமின்றியும் திறமையின்றியுமுள்ள ஊழியர்கள் உடனே வேலை நீக்கம் செய்யப்பெறுகின்றனர்.

கள்ளக் கடத்தலில் ஈடுபட்டிருப்பவர்கள் சிறைப்படுத்தப் பட்டுள்ளதால் பிற நாட்டுக் கடத்தல் பொருள்கள் வருவதும் அவற்றின் விற்பனையும் குறைந்துவிட்டன. வெளி நாட்டுச் செலாவணியில் இந்தியாவிற்கு முறையாக வந்துசேரவேண்டிய தொகை வராது இருந்த நிலை மாறி, அரசு வங்கிகளின் மூலம் வெளி நாட்டுப் பணம் முறையாக வரத் தொடங்கியுள்ளது.

மொத்தத்தில் கல்விக் கூடங்களில் அமைதி, தொழிற் கூடங்களில் முழு நேர வேலை, அலுவலகங்களில் உண்மை உழைப்பு ஆகிய அனைத்தையும் பார்க்கும்போது மாண்புமிகு பிரதமர் அவர்கள் இச் சூழ் நிலையைப் பயன்படுத்திக் கொண்டு நாட்டிற்கு என்னென்ன நன்மைகள் தொடர்ந்து செய்ய முடியுமோ அவை அனைத்தையும் செய்து நாட்டை நல்வழிப்படுத்த வேண்டுமென்ற எண்ணமே மக்களிடம் தலைதூக்கி யுள்ளது எனலாம்.

## ருசிய மொழியில் திருக்குறள்

பொய்யா மொழியான வள்ளுவரின் குறள் அண்மையில் ருசிய மொழியில் இரண்டாம் முறையாக மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. திரு. இளசோவ் குறளை முன்பு உரைநடையில் மொழி பெயர்த்தார். தற்போது திரு. இப்ராகிமோவ் 'செய்யுள்' வடிவிலேயே மொழியாக்கம் செய்துள்ளார்.

இம் மொழியாக்கத்திற்குப் பரிமேலழகர் உரையும் டாக்டர். மு. வரதராசனாரின் தெளிவுரையும் தமக்கு வழிகாட்டிகளாக அமைந்தன என்று இப்ராகிமோவ் நூலின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்.

"திருக்குறள் தொலை தூரத்திலுள்ள ஒரு நாட்டின் நினைவுச் சின்னம் மட்டும் அல்ல. அது ஓர் உயிருள்ள புத்தகம்; உண்மை, நன்மை, மனித

நேயம் ஆகியவற்றைப் பரப்பும் ஆற்றல் வாய்ந்த நூல். பண்டைய இந்திய மனிதாபிமான இலக்கியமான திருக்குறளின் எண்ணற்ற மொழி பெயர்ப்புக்கள், பல நாடுகளில் வந்துள்ளன. இஃது ஓர் அமர இலக்கியம் என்பதற்கு ஒரு சான்றாகும்'' என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

இந்நூலின் மற்றொரு சிறப்பு இந்திய அரசின் நேரு பரிசைப்பெற்ற ருசிய ஓவியர் திரு. பாப்லா விஸ்கியின் ஓவியங்கள் இந்நூலை அணி செய்வதேயாம்.

## மலையாளம் : மலையாளம் - ஆங்கிலம் பேரகரமுதலி

கேரளப் பல்கலைக் கழகமும், கேரள அரசும் இணைந்து 1953 இலிருந்து சூரநாடு குஞ்சன்பிள்ளை அவர்களைத் தலைமைத் தொகுப்பாசிரிய ராகக் கொண்டு தொகுத்து வரும் மலையாளம் - ஆங்கில அகர முதலியில் இதுவரை 1965, 1970 இல் இரண்டு மடலங்கள் வந்துள்ளன. ஏழு மடலங்களில் இது நிறைவுறும். இதனை உருவாக்குவதில் பட்டம் பெற்ற 36 பேர் கொண்ட முழு நேரக்குழு ஒன்று ஈடுபட்டுள்ளது.

குறிப்பு: தமிழக அரசும் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களைக் கொண்டு 'தமிழ்ச் சொற் பிறப்பியல் அகர முதலியை' உருவாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளது. ஆனால், இவருக்கு ஓராண்டுக்கு மேலாகியும் ஒரே ஓர் உதவியாளரைத்தான் அரசு கொடுத் துள்ளது. 36 அறிஞர்கள் சேர்ந்து உருவாக்கும் பணிபோன்ற பணியே இதுவுமாகும். எனவே தமிழக அரசும் திரு. பாவாணர் அவர்கட்கு உதவும் வகையில் விரைவில் அறிஞர்கள் பலரைக் கொண்ட முழு நேரக் குழுவை அமைக்க வேண்டுமென்று விரும்புகிறோம்.

## அருணகிரிநாதர் 600ஆவது ஆண்டு விழா

தித்திக்கும் சந்தப் பாக்களாலாய திருப்புகழை அளித்த அருணகிரி நாதப்பெருமானின் அறுநூறாவது ஆண்டு விழா சென்னையில் சிறப்பாக நடைபெற்றது. விழாவை யொட்டி அஞ்சல் துறையினர் அருணகிரி நாதரின் அஞ்சல் தலையை வெளியிட்டனர். இந்திய அரசு, செய்தி போக்குவரத்துத் துணை அமைச்சர் திரு. ஜெகன்னாத் பகாடியா ஆத்திக சமாசத்தில் 14-8-75 அன்று நடைபெற்ற விழாவில் அருணகிரிநாதர் அஞ்சல் தலையை வெளியிட்டார். விழாவிற்குத் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தலைமை தாங்கினார்.

விழாவை யொட்டிச் சொற்பொழிவுகளும் திருப்புகழிசை நிகழ்ச்சி களும் நடைபெற்றன. விழா 14, 15, 16, 17 ஆகிய நான்கு நாட் களிலும் நடைபெற்றது. 5—9—75இல் சென்னைச் சைவசித்தாந்த மகா சமாசத்தின் சார்பில் திரு. நல் முருகேச முதலியார் அவர்கள் தலைமையிலும் இவ்விழா சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

## கம்பன் விழா

காரைக்குடியில் ஆண்டுதோறும் கம்பன் விழா சிறப்பாகக் கொண்டாடப் பெற்றுவருவது போல இன்னும் பிற நகரங்களிலும் கொண்டாடப்பெற வேண்டியதற்காக ஆங்காங்குக் கம்பர் கழகங்கள் தோற்றுவிக்கப் பெற்றுள்ளன.

சென்னையில் நீதிபதி மாண்பமை இஸ்மாயில் அவர்கள் தலைமையில் அமைந்துள்ள கம்பர் கழகம் தமிழக ஆளுநர் மாண்பமை கே. கே. ஷா அவர்கள் தலைமையில் ஆகஸ்ட்டு 9. 10 இரு நாட்கள் சிறப்பாகக் கம்பர் விழாவைக் கொண்டாடியது. விழாவை யொட்டிப் பாட்டரங்கமும் பட்டிமன்றமும் நடத்தப் பெற்றன. விழா மலர் ஒன்றும் அழகான முறையில் வெளியிடப் பெற்றுள்ளது

திருச்சியில் 23, 24 ஆகஸ்ட்டு நாட்களில் திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கம் கம்பன் விழாவைக் கொண்டாடியது.

### அதியமான் பெருவழிக் கல்

தமிழகத் தொல்பொருள் அகழ்வாய்வுத் துறையினர் தருமபுரிக் கருகில் பெருவழிக்கல் ஒன்றைக் கண்டுபிடித்துள்ளனர். அதில் அடுத்துள்ள ஊரின் தொலைவு காதங்கள் கணக்கில் குறிக்கப் பட்டுள்ளது. பத்தைக் குறிக்கப் பெரு வட்டமும் ஒற்றை யெண்ணைக் குறிக்கச் சிறு வட்டமும் கல்லில் பொறிக்கப் பெற்றுள்ளன.

### விக்கிரம பாண்டியன் திருவீதிக்கல்

திருவண்ணாமலையில் 13 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த வீதிக்கல் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அதில் பாண்டியனுக்குரிய இரட்டை மீன்களும் செண்டும் பொறிக்கப் பெற்றுள்ளதோடு வீதியின் பெயரான 'விக்கிரம பாண்டியன் திருவீதி' என்பதும் பொறிக்கப் பெற்றுள்ளது. மேல் குறிக்கப் பெற்ற பெருவழிக்கல்லும் இத் திருவீதிக் கல்லும் தமிழர்தம் நகரமைப்பு முறையின் பெருமையை நன்குணர்த்துகின்றன.

### செங்கத்தில் இராமாயண ஓவியங்கள்

வ. ஆ. மாவட்டத்திலுள்ள செங்கத்தில் வேணுகோபால பார்த்தசாரதி கோயிலில் 17 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நாயக்கர் கால ஓவியங்கள் அண்மையில் தமிழகத் தொல் பொருள் துறையினரால் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. இராமாயண நிகழ்ச்சிகள் அனைத்தும் வரையப் பெற்றிருந்தாலும் ஒரு சில ஓவியங்களே சிதையாதுள்ளன. இவற்றுள் சில வால்மீகரும் கம்பரும் இயற்றிய இராமாயணங்களில் இல்லாதவையாக உள்ளன. இவை தெலுங்கு இராமாயணத்தில் இருக்க லாமோ என்று தொல்பொருள் துறை இயக்குநர் திரு. இரா. நாகசாமி ஐயுறுகின்றார்.

### உயர்குருதி யழுத்தத்தைக் குறைக்கத் தியானம்

சிந்தனை யொடுக்கமென்ற 'தியான' முறையே உயர்குருதி யழுத்தத்தைக் குறைப்பதற்கு மிக நல்ல வழி என்பதைப் பிரிட்டிசு மருந்தியல் அறிஞர்கள் உறுதியான முடிவாகக் கருதுகின்றனர். இஃது அந்நோயை அறவே போக்கும் என்றும் கூறுகின்றனர்.

### அதிமதுரத்தின் அருமை

தமிழ்நாட்டுக் கடை மருந்துகளில் ஒன்றான அதிமதுரம் பன்னெடுங் காலமாகச் சளிக்கும் தொண்டைப் புண்ணுக்கும் நலமளித்து வருகிறது.

நெதர்லாந்திலுள்ள மருத்துவ ஆராய்ச்சி நிலையம் அதிமதுரம் குடலழற்சியான 'அல்சர்' என்ற நோயை உடனே குணப்படுத்துகிறது என்பதை ஆய்ந்து கண்டுபிடித்துள்ளது. இதனைச் சீன, எகிப்திய, கிரேக்க, ரோம அறிஞர்களும் ஒத்துக்கொண்டுள்ளனர். மாவீரனான நெப்போலியன் கூட 'அல்சர்' நோயிருந்ததால் எப்போதும் தன்னிடம் அதிமதுரத்தை வைத்திருந்ததாக வரலாறு கூறுகின்றது.

இந்நோய்க்காக 'அலோபதி' மருந்தை உண்டு அவதியுறும் தமிழ் மக்கள் இதனை உணர்வார்களாக.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2, 140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

**இரும்பின் கதை** —மா. பா. குருசாமி எம்.ஏ., டி.ஜி.டி.

'கரும் பொன்' என்று அழைக்கப்படும் சிறப்பு வாய்ந்த இரும்பு பற்றிய வரலாறு கூறும் இந்நூலில் இரும்பின் தோற்றம், ஏற்றம், இன்றியமையாமை, இரும்பின் உதவியால் தொழில்கள் பெற்றுள்ள வளர்ச்சி, நாகரிக வளர்ச்சிக்கு இரும்பு பயன் பெறும் முறைகள் ஆகிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. ரூ. 3 00

**நன்னெறிக் கட்டுரைகள்** —புலவர் இரா. இளங்குமரன்

இந்நூலில், அன்பாயிரு, இனிமை பேசு, வாய்மை போற்று, நாவை அடக்கு, பொறுமை கொள்ளேல், சினத்தை ஒழி, நல்லினம் சேர், நன்றி மறவேல் என்னும் எட்டுத் தலைப்புகளில் நன்னெறிகளை இளைஞர்க்கு எடுத்துரைக்கிறார் இந்நூலாசிரியர். கட்டுரைகள் சுவையும் பயனும் உடையன. பள்ளி நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய நூல். ரூ. 2 00

**கிறித்தவப் புலவர்கள்** —என். கே. வேலன் பி.ஏ.

டாக்டர் ஜி. யு. போப், டாக்டர் கால்டுவெல், வீரமா முனிவர், டாக்டர் மிரான் வின்சுலோ, கிருட்டிணபிள்ளை, பண்டித சவரிராயர், அறிஞர் சுவாமிக் கண்ணுப்பிள்ளை ஆகிய ஏழு கிறித்தவப் புலவர்களின் வரலாறுகள் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் முறையில் இனிய எளிய தமிழில் எழுதப்பட்டுள்ளன. ரூ. 2 00

**தமிழ் நாட்டுப் பெண்மணிகள்** —சு. அ. இராமசாமிப் புலவர்

மனோன்மணி அம்மையார், அசலாம்பிகை அம்மையார், நீலாம்பிகை அம்மையார், இராசேசுவரி அம்மையார், தனபால பதுமாவதி அம்மையார், கிருட்டிணவேணி அம்மையார் ஆகிய அறிவாற்றல் மிக்க தமிழ் நாட்டுப் பெண்மணிகளின் வரலாறுகள் இந்நூலில் இனிய எளிய தமிழில் எழுதப்பெற்றுள்ளன. ரூ. 2 50

**தொண்டை நாட்டுப் புலவர்கள் (பகுதி-1)**
—சு. அ. இராமசாமிப் புலவர்

பூண்டி அரங்கநாத முதலியார், சோமசுந்தர நாயகர், பூவை கலியாணசுந்தர முதலியார், செல்வக்கேசவராய முதலியார், நமசிவாய முதலியார், மயிலை சிவமுத்து, தணிகைமணி செங்கல்வ ராயபிள்ளை ஆகிய தொண்டை நாட்டுப் புலவர்களின் சீரிய வரலாறுகள் இனிய எளிய தமிழில் எழுதப்பெற்றுள்ளன. ரூ 2 50

**நீரின் கதை** —என். கே. வேலன் பி.ஏ.

நீரின் சிறப்பு, அதன் பயன், கடலின் பெருமை, ஆற்றின் அருமை இன்னபிற செய்திகள் இனிய எளிய தமிழில் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. நீரின் அருமையை மக்கள் உணர்ந்து வரும் இந்நாளில் நீரின் கதை கூறும் இந்த நூலின் அருமையினை உணர்ந்து படித்துப் பயன் பெறுவார்களாக. ரூ 2 00

பதிவு எண் : M. 4899


# மூலிகைமணி கண்ணப்பரின்

# அரிய தயாரிப்புகள்

(உடல் சக்திக்கும், வளர்ச்சிக்கும் உகந்தது)

| | | |
|---|---|---|
| அமிர்த சஞ்சீவி லேகியம் | ரூ 10 | 00 |
| வல்லாரைத் திப்பிலி (ஞாபக சக்திக்கு) | 5 | 00 |
| குடும்ப மருந்துப் பெட்டி (10வித மருந்துகள் அடங்கியது) | 25 | 00 |
| வாய்வுச் சூரணம் (வயிற்றுக்கோளாறு, வாய்வுப்பிடிப்புகள்) | 5 | 00 |
| நாக்குப்பூச்சி ஒழிய மாத்திரை | 5 | 00 |
| முசுமுசுக்கைத் தைலம் (ஆஸ்த்மா, பீனிசு நோயாளிகட்கு) | 5 | 00 |
| அவுரி - தலைமுடித் தைலம் (தினசரி உபயோகத்திற்கு, முடி கொட்டுவது நிற்கவும், முடிவளரவும்) | 10 | 00 |
| மூலிகை ஸ்நானப் பொடி | 2 | 00 |
| தூதுவளை சூரணம் (சளி நீங்கிட) | 3 | 00 |
| கருவேலன்பட்டை பல்பொடி | 1 | 00 |

தேவையான மருந்துக்கு உரிய தொகையுடன் அஞ்சல் செலவு ரூ. 3-00 சேர்த்து

**ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.**
**7, அருளாம்பாள் தெரு,**
**தி. நகர், சென்னை - 17.**

என்ற முகவரிக்கு M. O. செய்து பெறலாம்.
நேரிலும் மேற்கண்ட முகவரியில் பெறலாம்.

தொலைபேசி எண் : 445689


... ..ர் அச்சகம், சென்னை - 1.